Reg. No. M. 1823.

14 பக்கங்கள்.

# குமரன்

The "Kumaran" Published Every Thursday.

ஆ.ம் சு. } காரைக்குடி விபவஹ ஐப்பசிமீ ௩௰௨ வியாழக்கிழமை (15—11—1928.) { முத்து ௪௪.

வாரப்பதிப்பு.

சந்தா விபரம்.

உள்நாடு வருடம்
ஒன்றுக்கு ரூ. ௩-0-0
ஆறு மாதம் ௲-0-0
பிரதி ௧-க்கு 0-௧-௲
வெளிநாடு ௲-0-0



# குமரன்



"என் கடன் பணிசெய்து கிடப்பதே"

மாதப்பதிப்பு.

சந்தா விபரம்.

உள்நாடு வருடம்
ஒன்றுக்கு ரூ. ௧-அ-0
வெளிநாடு வருடம்
ஒன்றுக்கு ௨-0-0
தைமீ வருடாரம்பம்

"கதரே உயிர்" "கருணையே தெய்வம்."

## பண்ணையும் பள்ளரும்.

திருவாளர் ரா. பி. சேதுப்பிள்ளை பி. ஏ., பி. எல்.



வேளாண்மை என்னும் விழுமிய பணியில் தலைசிறந்த நாடு தமிழ் நாடாகும். மேழிச் செல்வம் கோழைபடாதென்னும் வாய்மொழி பழமொழியாக இந்நாட்டில் நிலவுகின்றது.

"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார், [மற்றெல்லாம்
தொழுதுண்டு பின்செல் பவர்"

என்று வேளாண்மையின் பெருமையை நாயனார் விளங்குரைத்தார். இத்தகைய உயரிய தொழிலை மேற்கொண்டோர்ந்தோர் வேளாளர் என்று பெயர் பெற்றார்கள். வேளாண்மையால் வீறுபெற வாழ்ந்த மக்கள் செல்வத்திற் செழித்த செழும் பண்ணைகளாய் விளங்கிய போது தமது மரபிற்குரிய தொழிலை மள்ளரிடமும், பள்ளரிடமும் ஒப்புவித்தார்கள். இவ்வகுப்பார் நிலத்தைப் பண்படுத்திப் பயிர் செய்து பருவத்தில் களைபறித்து நீர் பாய்ச்சிப் பணிசெய்யும் பான்மையை இன்றும் தமிழ் நாட்டில் காணலாம். மள்ளர்க்கும், பள்ளர்களும் மழையே உயிராயிருத்தலின் அம்மழை பொழி மேகத்தைக்கண்டு அன்னார் ஆடிப்பாடி அகங் களிப்பது இயல்பேயன்றோ? வெண்ணிறமேகம் நீராவியை ஏற்றுக் கருநிற மேற்று மரங்கள் அடர்ந்த மலைகளைச்சார்ந்து மழைபொழியும் மாண்பினை மள்ளர் நன்குய் அறிவார்கள், மேக நிரைகள் ஒன்று சேர்ந்து மின்னி மழைபொழியும் முறையை,

"மேகமெல்லா மொன்ருய்க்கூடித்
தான்கருக்குதே—மெத்த
மின்னல் மின்ன வாசவன்கை
வில் லெடேக்குதே
நாகரீகப் பொதியமலைக்
காற்றடிக்குதே—கொண்டல்
நாலுதிக்கும் கோடையிடி
தானிடிக் குதே
ஏகபோக மாமரத்திற்
குயில்கள் கூவுதே—மழைக்
கேற்றமாஞ்சோ ரீத்தவளை
கூப்பிடு குதே
ஆகையினால் எங்கள் திரு
முக்கூடல் மாநகரில்
அந்தி நேர மெல்லா மழை
வந்து பெய்யுதே"

என்று மள்ளர் கண்டு மனம் களிப்பார்கள், வானத்தில் கார்மேகம் திரள்கின்றது. மின்னல் மின்னுகின்றது. மெல்லிய தென்றல் மேகங்களைச் சேர்க்கின்றது. எத்திசையும் இடியோசை கேட்கின்றது. சோலை மரத்தில் குயில் கூவுகின்றது. சொரித் தவளை கூப்பிடுகின்றது. இக்குறிகளால் அந்திமாலையில் மழை அடைத்துப் பெய்யுமென்று மள்ளர்கள் அறிகின்றார்கள், இன்னும் மலையில் மழை பொழிந்து ஆற்றில் நீர் பெருகுதற்குரிய நற்குறிகளை அறிந்து பள்ளர் ஆடிப்பாடித் துள்ளி அகம் களிப்பார்கள்.

"ஆற்று வெள்ளம் நாளைவரத்
தோற்றுது குறி—மலை
யாளமின்னல் ஈழமின்னல்
சூழ மின்னுது
நேற்று மின்றும் கொம்பு சுற்றிக்
காற்றடிக்குது—கேணி
நீர்ப்படு சொரித்தவளை
கூப்பிடு குது
சேற்றில் நண்டு சேற்றின் குழி
ஏற்ற டைக்குது—மழை
தேடியொரு கோடிவானம்
பாடி யாடுது
போற்றுதிரு மால்அழகர்க்
கேற்றமாம்பண்ணை—சேரி
புள்ளிப் பள்ளர் ஆடிப்பாடி
துள்ளிக் கொள்ளுமே"

மேற்கும் கிழக்கும் மின்னல் மின்னுகின்றது. நேற்றும் இன்றும் காற்றுச் சுழன்று வீசுகின்றது. கேணித்தவளை கத்துகின்றது, சேற்றில் வாழும் நண்டு வளையின் வாயிலை அடைக்கின்றது. வானம்பாடிப் பறவை வானத்தில் வட்டமிட்டு ஆடுகின்றது. ஆகலால் இன்று மலையில் மழைபொழிந்து நாளை ஆற்றில் வெள்ளம் வருமென்று பள்ளர் ஆடிப்பாடித் துள்ளுகின்றார்கள், அவ்வாறே மலையில் மழை பொழிந்து, அருவி வீழ்ந்து, ஆறுபெருகி கண்ணுக்கினிய வெள்ளம் கடுகி வருகின்றது.

"தேனருவித் திரை யெழும்பி
வானின் வழி ஒழுகும்
செங்கதிரோன் பரிக்காலும்
தேர்க் காலும் வழுக்கும்
கூனலிளம் பிறைமுடித்த
வேணி அலங் காரர்
குற்றாலத் திரிகூட
மலை எங்கள் மலையே"

என்று குறத்தி புகழ்ந்த குற்றாலமலையில் பொங்கி வீழ்ந்த வெள்ளம் பெருகி வருகின்றது. பள்ளர்கள் மனமகிழ்ந்து பள்ளியரை அழைத்து வெள்ளத்தின் பெருமையை வியக்துரைக்கின்றார்கள்,

'குற்றாலத் திரி, கூடல் மால்வரை
உற்றமேகம், பொழிந்த நீர்
கூடிப் பொருனை, நாடித் திரு
முக்கூடல் பதியை வலங் [கொண்டே
வற்று மடுவில் பறவை குறவை
வாளை, கெளை, தேளிமீன்
பற்று அயிரை கெண்டைகெளிறு
பரு விராலும் மணலிலே
பாயக் காலிற் பாயக் குளத்தில்
பாய வயலிற் பாய்ந்ததே
சிற்று றென்பது பெற்றாலும் ஒரு
சிறியவர் மனப் பெருமை [போல்
சித்திரா நன்னதி பெருகிவார
சிறப்பைப் பாரும் பள்ளி [யரே'

என்னும் பள்ளரது மொழிகள் அவரது உள்ளக் களிப்பை இனி துணர்த்துகின்றன. சிற்றாறு என்னும் பெயரமைந்த சித்திர நதியில் புதுப்புனல் பெருகி வருகின்றது. பொருனை நதியோடு கலக்குமாறு வேகமாய் வரும் அவ்வாற்று வெள்ளத்தில் மீன்கள் துள்ளி விழுந்து மணலிற் புரண்டு நீரில் பாய்ந்து, காலிற் பாய்ந்து, குளத்திற் பாய்ந்து வயிலிற் பாய்ந்து, விளையாடுகின்றன, வாளையும் விராலும் கெண்டையும் கெளிறும் அயிரையும் குரவையும், வெள்ளத்தில் புரண்டு களிக்கின்றன, இவ்வாறு ஆறு நிறைந்து கால் நிறைந்து, குளம் நிறைந்து, வயல் நிறைந்து, வளம்பெருக்கிய ஆற்றின் அழகைக்கண்டு பள்ளரும் பள்ளியரும் வியந்து நின்றார்கள், ஆனந்தத்தால் ஆடிப்பாடிய பள்ளியர் சோலைக் குயிலைக் கூவி அழைத்து நாட்டை வாழ்த்துமாறு கவிலும் முறை மிக்க நலம் திகழ்வதாகும். பொருனைத்திரு நதியின் இருகரையும் பூஞ்சாலி விளையுமாறும், மாத மும்மாரி மாசுற பெய்யுமாறும் மாலழகர் பெருமையை மாநிலத்தில் ஓங்குமாறும் குயிலின் வாயிலாகப் பள்ளியர் வேண்டுகின்றார்கள்.

"பொருனைத்திரு நதியினிருபாலும்
பூஞ்சாலிவிளையவே கூவாய் குயிலே
அருள்பெருக் தருமநிதி சாத்தரில் [பெரிய நம்பி
ஐயனூர் வாழ்கவே கூவாய் குயிலே
பெருவளந்தருகாடு திங்கள் மும்மாரியும்
பெய்யமழை வளம்பாடிக் கூவாய் [குயிலே
கருநேமப் புயலழகர் மருவு சந்நிதி
கற்பகாலங்கள் விளங்கவே கூவாய் [குயிலே"

என்று பள்ளியர் கூறும் மொழிகள் பண்பு வாய்ந்தனவாம். இன்னும் முத்தமிழ்க் கல்வியும் முறையாய் ஓங்குமாறும், செல்வம் சிறக்குமாறும், பாவலர்க்குதவும் பண்ணைகள் தழைக்குமாறும் மருதநில மக்கள் மாண்புடன் ஓங்குமாறும் பள்ளியர் குயிலை அழைத்துக் கூறுகின்றார்கள்,

"சீவலப்பேரிதமிழ் மூவகைக் கல்வியும்
செல்வமும் பெருகவே கூவாய் [குயிலே
மாவளத்துடன் அழகர்தாவளக் குடி [வாழ்க
மருதூரை வாழ்த்தியே கூவாய் [குயிலே
பாவலர்க்குபகாரி காவை அம்பலவா [ணன்
பலகிளையும் தழைக்கவே கூவாய் [குயிலே"
காவலர்க் குயர்பெருமை மேவுதேர்ப் மா [லழகர்
கட்டளைகள் தழைக்கவே கூவாய் [குயிலே"

என்று குயிலை நோக்கிப் பள்ளியர் குழைந்து கூறுவது உள்ளத்தை மகிழ்விப்பதாகும்,

இவ்வாறு நாட்டுவளம் பெருகுமாறு நல்லுரை நிகழ்த்திய பள்ளியர் தம் குலப் பெருமை கூறும்முறை மனத்தைக் குளிர்விப்பதாகும். வடிவழகப் பள்ளனுக்கு வாய்ந்த பள்ளியர் இருவரில் முக்கூடலைச் சேர்ந்த முத்தபள்ளி தன் குலமுறையை நிகழ்த்தும் திறம் மிக நேர்மைவாய்ந்ததாகும்,

"உத்தர பாகமான
சித்திர நன்னதி தென்பால்
ஓடும் பொருனையுடன்
கூடும் போதே
அத்தனை காலமும் தொட்டு
இத்தனை காலமுங் கண்டு
அடிவடி வாழை யாய்க்
குடியில் வந்தேன்
பத்திலே பதினொன்குய்
வைத்தா னெனைக்குடும்பன்
பண்டே சரடு கட்டிக்
கொண்டா னென்னை
முத்தமிழ் நாட்டழ கர்
கொத்தடி யானுக்கான
முக்கூடல் முத்தபள்ளி
யானே ஆண்டே"

முக்கூடல் நகரின் வடபால் ஓடும் சிற்றாறும் தென்பால் ஓடும் பொருனையும் ஒன்றாய்க் கலந்த காலமுதல் வாழையடி வாழையாய் வந்த பழங்குடியில் தோன்றிய பள்ளி தன் குலப்பெருமை கூறி மகிழ்கின்றாள். இம்முத்தாளுக்கிளைய மருதூர்ப்பள்ளி சிவசேசப்பள்ளியாய் விளங்குகின்றாள்,

"சேவற் கொடியானுக்கும்
ஆதவா கனனுக்கும்
செய்ய நிறத் தந்தையான
சேக்கர் நிறத்தோன்
ஆவலுட னேயமரர்
அமுதங் கடைந்த வன்று
ஆலமுண் டமாருக்கு
அமுதமளித் தோன்
காதலுடன் தென்மதுரை
பாண்டியன் கன்னிகைக்
கண்டு மணமாலை யிட்ட
கர்த்தனு னேன்
பாவலர்க் கருள்புரிவேர்ன்
பாத மறவாமல் வாழும்
பள்ளன் கொண்ட சிவசந்திப்
பள்ளிநா னண்டே"

என்று மருதூர் இளைய பள்ளி தன்மரபின் பெருமையை மாண்புற உரைத்துப் போந்தாள். இன்னும் தான் பிறந்த ஊரின் பெருமை பேசப் போந்த இளைய பள்ளி இயற்கை மொழிகளால் தன் ஏற்ற முரைக்கின்றாள்.

"செஞ்சிக்கும் கூடலுக்கும்
தஞ்சைக்கும் ஆணை செல்லும்
செங்கோல் வடமலேந் திரன்
வந்த ஊரே
செஞ்சிற் குதிரைக்குள
மஞ்சிற்கும் சக்கரக்கல்
நிலையிட்டாளில் பள்ளனை
தலையிட்டேன் நான்
கஞ்சிக்கும் தன்னிலேதான்
கெஞ்சிப் புகுந்தவள்ளம்
கண்டாளைப் பட்டேகொள்ளும்
பெண்டாளனவன்
மஞ்சிற் கருப்பழ கர்
தஞ்சைப் பள்ளனுக்கேற்ற
மருதூர் இளைய பள்ளி
யானே ஆண்டே"

என்று செல்வமம்பதியில் செங்கோலோச்சிய வடமலை ஐயன் வாழ்ந்த மருதூரே தன் ஊர் என்று புகழ்ந்து மகிழும் பள்ளியின் மனப்பான்மை சாலவும் சிறந்ததாகும், இத்தகைய பள்ளியர் நெற்றியில் அஞ்சனப் பொட்டிட்டு நெகிழ்ந்த கருங்கொண்டையை இரண்டாய் வகிர்ந்து கையில் வெற்றிலை மடித்து தலையில் மாலை முடித்து ஆடிப்பாடி வரும் தோற்றம் அழகுதக்கதாகும்.

முத்து வர்ணச்சேலை கொய்து
இடையி லுடுத்தி
மோககமாகவே வெளியில் நடந்து
அந்தமதில் வெற்றிலையைத்
தட்டி மடித்து—நல்ல
ஆசையுட னேசுவைவாயித் [தடித்து
கொந் துமலர் மாலைதனை
மெத்த முடித்து—கருங்
கோகிலம்போல் வார்த்தை
சொல்லி ஈர கம்பாடி
எத்திசையும் புகழும்தன்
முக்கூடற் பண்ணை—யேவல்
எந்தநாளு முத்த பள்ளி
தோன்றி குளே"

இவ்வாறு முத்துவர்ணச் சேலை யுடுத்து வெற்றிலை தட்டி மடித்த கொந்துமலர் கூந்தலில் முடித்து கோகிலம்போல் பேசிவரும் பள்ளியர் இன்றும் நம் பழனங்களில் வேலை செய்யக் காணலாம், ஆகவே மன்னுயிர்க்குயிரான மழைக் குறி அறிந்து, வெள்ளம் கண்டபோது உள்ளங்களித்து வேளாண்மையால் வீறு பெற்று விளங்கும் மள்ளர் வாழ்க்கை நக்களிகளில் இனிது மிளிரக் காணலாம்.

(சென்றவாரத் தொடர்ச்சி.)

இந்தியாவின் விடுதலைப் போருக்கு அடிகோலியது காங்கிரஸ் கூட்ட மெனலாம். அக் கூட்டம் 1885-ஆ ஆரம்பிக்கப்பட்டு இற்றைக்கு 44 வருஷங்கள் ஆகின்றன. அறிவு விளக்கமுற்றோரெனவும், ஆண்சிங்கங்களெனவும் வீறுகொண்டிருப்போர் கூடத் தத்தம் அபிப்பிராய பேதங்களுக்கோர் முடிவை இன்றளவும் கண்டபாடில்லை. இப் பிணக் கறுக்கும் ஸஞ்சீவி தேடுகின்றோர்க்கு பெண் கல்வி ஒன்றே தான் மருந்தெனும் ஆணி மந்திர உபதேசஞ் செய்வோர் அறிவுடையோர்.

காங்கிரஸைக் கண்ட ஞான்றே, கட்டாயப் பெண் கல்விக்கும் ஞானக் கல்லூன்றியிருப்பின், இருக்குமிட மறியாது, இற்றைநாள நம்மவர் தவிக்கின்ற சுதந்திரப் பொக்கிஷமானது, வெகு நாட்களுக்கு முன்னதாகவே நமக்குச் சித்தித்திருக்குமென்றுரைக்கும்படியான கற்ற ஆருட சாஸ்திரம் என்னைத் தூண்டுகிறது.

இதுவரைக்கும் யான் சொல்லிப் போந்ததிலிருந்து பெண் கல்வியின் துணைபெறுமளவும், ஆண் கல்வி பூரண பயன்தருவதன்றெனு முண்மை, விளக்கமுற்றதென் றெண்ணுகிறேன்.

பிறப்பில் பிராமண னுண்டெனும் பேயொழிக்கொழியும். தன் சகோதரனைத் தீண்டேனெனப் பிதற்றுவோன் தீயோன், திருவிலி, திகைப்புறு மதியிலி என்பதுணரப்படும். என் பின்னவர்க்கு அடகுங் கூழுமே யமிர்தம். எனக்கெனில், ஆவின் நெய்யும், அன்னமும் பொருந்துமாகையால் அப்பா சொத்தும், அம்மா சொத்தும், எம்பி அன்புடன் எனக்கே தருவர் என்பது போன்ற மாய வஞ்சகங்கள் மறைந்தொழியும். இந்தியா இடர்க் கடலு லாழ்ந்ததற்கேது பெண் கல்வி மறுத்த பெரும்பாவமொன்றேயா மெனு முன்னுணர் வுதிக்கு மன்றே.

கல்விக் கடுத்தபடியாகப் பெண்கள் பெறவேண்டு முரிமை தாய், தந்தையர் சொத்தில் ஆண் சந்ததிகளோ டொத்த தாயபாகமாம். இக் குறைக்காக ஆண் மக்கள் மேல் குற்றஞ் சொல்ல நியாய மொன்றுமில்லை. எதோவோர் யுகத்தில் மநுச்சாமி சொன்னாரென்று எழுதிவைத்திருக்கும் நூலைக் காலத்திற்கேற்றபடி மாற்றி யமைக்கும் நீதிமான்களோ, தலை நிமிர்ந்து நின்று உரிமைபெறு மாற்றலுடன் பெண்களோ, உதயமாவதோடு அவ் வுரிமை பெறப்படும்.

முடிவாக விவாக உரிமையைப்பற்றிச் சற்று கூற விரும்புகிறேன். இவ் விஷயத்தில் பால்ய விவாகத்தைப் போற்றிவரும் வகுப்பினரே பெருந் தீங் கிழைக்கின்றாரென்பது இந்நாள் உணரப்படுகின்றது. இக் கொடிய செயல் திராவிட நாட்டுப் பிராமண வகுப்பிலும், அன்னாரைப் பின்பற்றுவது மேன்மையென் றெண்ணி மயங்கும் சௌராஷ்டிரர், கோமுட்டி வைசியர், குலாலர் முதலானோ ரிடையிலுந்தான் பரந்துகிடக்கக் காண்கிறோம்.

விஷ்ணுவின் அவதாரமான பரசுராமரிடமிருந்து கோள பூமியைத்தானம் வாங்கிக்கொண்டு அம் மஹாநுபாவரின் மாதிர்ஹத்தி தோஷத்தை நிவர்த்தித்த கௌரவம் கோளநாட்டு ஸ்மார்த்த பிராமணராம் நம்பூரி வகுப்பார்க்கிருக்கிறது. அன்னார் தங்கள் நாட்டிற்குச் செல்லும் மற்றெவ்வகுப்பு பிராமணரையும் தங்களோடொப்ப வைதீக மதாசார முடையோராகக் கைக்கொள்வதில்லை. அத்துடன் கோளநாட்டரசர்களும் நம்பூரிகளை உயர்ந்த நிலையில் வைத்தே பாராட்டிவருகின்றார்கள். தவிரவும் இமய மலையிலுள்ள கேதார நாதர் கோயில் கைங்கரியஞ் செய்வோரும் இந் நம்பூரிகளே எனத் தெரிகிறது. இவ் விதப் பெருமை பெற்றிருப்போர் பரம்பரையாக இன்றளவும் தங்கள் பெண் மக்களை மூத்த வயதிலும் விவாகஞ் செய்து கொடுக்கின்றார்கள். அதனை இழிவென்றோ, வைதீக விருத்தமென்றோ கருதி அவரைப் புறக்கணிப்போர் எவருமிலர். மேலும், பால்ய விவாகம் பெருந் தீங் கிழைப்பதென் றுணர்ந்த பிராமணர், ஆங்காங்கு அதனை ஒழிக்க முயல்கின்றாரென் பதுங் கண்கூடு. இதனிடையில் வைதீக அம்மாஞ்சிப் பேர்வழிகள் தலை நீட்டித் தாண்டவ மாடுவதிலும் குறைவில்லை. இன்னோர் பூர்வீகர் சிலர்க்குப் பெண் கல்வி என்னும் பேச்சு கேட்ட மாத்திரத்தானே, பேயாட்டம் தலைக்கேறிய நாளும் சின்னாட்கட்கு முன் னுண்டாயிருந்ததன்றல்லவா? பாரத நாட்டின் நற்காலமாக அப்பேய் தொலைந் தொழிந்தது. இப்பொழுது சிற்சில வைதீக வாய்ப்பறைகளைப் பாலிய விவாகப் பேய் பிடித்தாட்டத் தலைப்பட்டிருக்கிறது. பாலிய விவாகத்தால் யாது நலன் விளைகின்றதென்று இன்னார் கூறுகின்றார். அறிவெனு மூற்று முற்காலத்தில் பெருக்கெடுத்தொழுகிக்காட்டில் மறைந்தமையாலும், பிற்காலத்தில் அவ் வூற்றுக்கண் வறண் டொழிந்தமையாலும் இப்பொழுதுள்ள மக்கள் அறிவு நீர் விழையின், ஊற்றுநீரொன்று முன்னோன் எழுதிவைத்திருக்கும் எட்டினை நக்குவதொன்றே யவர் தலைவிதி யெனும் வழக்கே வைதீக மூட்டைகளின் கொள்கைபோலும். "அக்கக்கா கன்னன் கன்னன்" என்ற பாடத்தை மனனம் பண்ணிக்கொண்ட ஏழைக் கிள்ளை அதனைப் பேச்சென்று மதித்து உளறுவதையொத்தே இப் பழஞ் சாத்திரக்குக்ஷிகளும் வாதாட முற்படுகின்றார். கோனார் எதுவழிஎங்கு செல்லுகின்றாரெனு முணர்வு சற்றுமில்லாத செம்மறியாடு சும்மா கத்திக்கொண்டு அன்னார் காலடி நோக்கிப் பின்னோடுவதை யொப்ப ஏட்டின் கருத்தறியா மாந்தர் கத்திக்கொண்டோடத் துணிவது விந்தையினும் விந்தை! இன்னார் ஏட்டுச் சுரைக்காய்களென்பதை நாட்டு மக்கள் உணரும்படி செய்வதே உலக ஊழிய மெனப்படும். எழுதினோர் ஏட்டையும், பாடினோர் பாட்டையும் கெடுத்தார்களென்றுலவும் பழஞ்சொற்கள் கருத்தறியா மாந்தர் கையகத்தே சிக்குண்ட திருத்தமிலா நூலைத் தெரிப்பதன்றோ?

காலத்திற் கேற்றதென அவ்வக் காலங்களில் எழுதிவைக்கப் பட்டிருப்பவற்றையே ஸ்மிருதிச் சட்டங்க ளென்கின்றார். இவைகள் பல்வேறு ஏடுகளா யிருக்கின்றன வென்பதி லிருந்தே புது ஏடுகளும் பிறக்கக் கூடுமென்பது போதரு மென்க.

இவ் வேட்டு வழி யொழுகுவதைத்தானோ, வேத வொழுங்கெனப் பொருள்படும் வைதீக நடையென்பது? யானறியேன். அறிவும் ஆற்றலு முடையோர் விளக்குவாராக.

விவாஹ சம்பந்தமான மற்றொரு கொடிய தீங்கு பெற்றோரைப் பிடித்த பணப் பித்தால் மக்களை விற்பதும் வாங்குவதுமாகும். அதன் விவரமாவது:— பாலிய விவாஹப் பேய்ச் சடங்கின் வாய்ப்பட்டோரிடை ஆண்மக்கள் தொகை குறைவாயின் பெண் பெற்றோர் பண மீந்து மணமகனைக் கொள்கின்றார். பி. ஏ. பட்டதாரிக்காகவும் பணமீகின்றார். பெண்மக்கள் தொகை குறையின், ஆண் பெற்றோர் விலை கொடுத்து மணமகளைப் பெறுகின்றார். இவ்வாறு மாட்டுச் சந்தை வியாபாரம் மக்கள் மணச் சந்தையிலும் பயிலப்படுவதால் பெண் பாலாருக்கே அதிக கஷ்டம் ஏற்படுகிறது. எங்ஙன மெனின்? மனமொவ்வாப் பெண் கொண்டானுக்குப் பெண்ணை விலக்கவும் வேறு மணஞ் செய்யவும் உரிமை யிருக்கிறது. பெண்ணுக்கும் அதுபோன்ற உரிமை யிருப்பின் சமத்துவம் நிலவும். ஆண்களின் சட்டமாகையால் பெண்கள் உரிமை யிழந்து கிடக்கலாயினர். வைதீகரெனும் புனைப் பெயர் பூண்டோர் இம் மிருகச் சட்டத்திற் காதரவளித்து நிற்பதற்கோர் உட்கருத்துளது. அது யாதெனின் கூறுவேன். பெண்ணொடு கூடிய ஆடவனே பூரண மனிதன். அவனே வேதக் கிரியைகள் செய்யும் உரிமை பெறுவான். சாகுமளவும் விதிப்படி ஜபதவங்கள் புரியார்க்கு நற்கதி யில்லை. இவை பிராமணச் சட்டங்கள். இவைகளை வரைந்தோர்க்கு, அறிந்தோ, ஓர்மை மயக்கத்தாலோ, தான் சாமளவும் தன் ஏவற்பணி செய்து உடனுறைவதற்கோர் பெண் வேண்டு மென்பது மனத்தின் கண் ஆழமாய்ப் புதைந்து கிடந்த தென்பது வெளிப்படை. ஆகையால் சாஸ்திரியார் சுமார் ஆம் பக்குவ மடைந்த பொழுது ஆச்சியார் தேகவியோக மாயின், ஐயர் ஆவர்த்தன விவாக மன்னியில் ஒரு நாளைக் கூடவும் கழிக்க என்னால் முடியாதென்று கூசாமற் கூறலாம். ஏன்? கூச்சமெதற்கு? கிழட்டுப் பருவமான பின்னும் தாலிகட்ட வேண்டுமென்ற மானமுடையோர் உரைக்கக் கூசாரோ? கூச்ச மேற்படத்தான் செய்யும். ஆனால், நம் சாஸ்திரியாரை அக்கூச்சத்திலிருந்து காப்பாற்றுவதை யுத்தேசித்தே விதி யேற்படுத்தப் பட்டது. அவ்விதி உள்ளிருக்கும் காமுகனை மறைத்தது மன்னியில், அவனை நெறிதவறாத வைதீகர், வேதவித்து, என்றெல்லாம் புகழும் படியும் செய்து விடுகின்றது. அதுகிடக்க, பெண்களுக்குப் புனர் விவாக மாகலாமென்ற விதி யொன்று ஏற்படுமாயின், ஆவர்த்தன விவாஹக் கிழடுக்கு இளம் பெண்ணை மணக்கும் பாக்கியம் எங்கிருந்து வரும்? வேறொரு கிழடைத்தானே கட்டி யழவேண்டும். இந்தக் கள்ளக்குட்டை முன்னறியார்க்கு யானொரு புதையல் கொடுத்ததாகு மென்று எண்ணுகின்றேன். இதுவே பெண்களுக்குப் பாலிய விவாகம் விதியாகவும் புனர் விவாகம் விலக்காகவும் ஏற்படுத்துவதற்குத்துணை நின்ற காரணம்.

திண்ணைப் பக்கங்களி லெல்லாம் தலை மொட்டை யடித்து, அமங்கள வேடம் புனைந்து, பெண்கள் நிறைந்திருப்பதைக் கண்டு சாஸ்திரியார் ஆனந்த மடைகின்றார் போலும். பாவம்! பழிக் கஞ்சாது வாரபட்சமான சட்ட மெழுதிவைத்தோரின் சந்ததியாரே பெரும்பாலும் அப்பாதகத்தின் சம்பளம் பெறுகின்றா ரென்பதும் குறிப்பிடத் தக்கது. தன்வினை தன்னைச் சுற்றும். வினைப்பயன் துய்த்து முடிவெய்துமளவும் கற்புத்தி உதிப்பதும் வுருமையே.

பெண்ணுரிமையைப் பற்றி என் சிற்றறிவிற் கெட்டிய வற்றை எழுதியுள்ளேன். பெரியார் ஆற்றலுக்கியைய வதனை விரித்து நடைமுறையில் கொணர வேண்டு மென்று விண்ணப்பித்துக் கொள்கின்றேன்.

# பெண்ணுரிமை.

'நந்தி' எழுதுவது.

---











# கோயில் பூசை.

பார்ப்பனரல்லாதான் எழுதுவது:-

(சென்றவாரத் தொடர்ச்சி.)

பொதுஜனங்களால் இக்கோயில்களிலுள்ள உருவங்கள் ஒரு படி மேலான வலிமை பெற்றிருக்கின்றன வென்று கருதப்படுகின்றன. பார்ப்பனர் வசப்பட்ட கோயில்களை விட ஆர்ப்பாட்டங்கள் மற்றக் கோயில்களில் அதிக முண்டென்பதையும் ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும். இந்தக் கோயில்களுக்குப் பரம்பரை யடிமைகளாக உள்ளவர் எண்ணற்றார். அவருள் பார்ப்பனரும் ஆயிரக் கணக்காக இருக்கின்றனர். இதனால் கடவுளுக்கு நெருங்கிய பந்துவாக இருப்பவர் பார்ப்பனர் தானென்று கூறப்படுவது நம்பத்தக்கதல்ல வென்பது விளங்குகிறது. பார்ப்பனரைப்போலவே பார்ப்பனரல்லாதாருக்கும் கடவுள் விக்கிரகத்தை தொடவும் பூசிக்கவும் உரிமை யுண்டென்பதும், அப்படிச் செய்வதால் ஒரு குறையு மில்லை யென்பதும் விளங்கவில்லையா? அதிகமான வரும்படி வருகிற கோவில்களைப் பார்ப்பனர் கைப்பற்றிக் கொண்டனர். இது ஒருபுற மிருக்க, பார்ப்பனர் பூசை செய்யுங் கோயில்கட்கும் மற்றவர் பூசை செய்யுங் கோயில்கட்கும் ஒரு பெரிய வித்தியாச மிருக்கிறது. குயவர்கள் பூசிக்கும் ஐயனார் கோவிலை யெடுத்துக் கொள்ளலாம். இதில் சுவாமியைத் தொட்டுப் பூசை செய்யும் உரிமை மற்றவருக்கு அளிக்கப்படா விட்டாலும் எல்லாரும், பிராமணரும் பிராமண ரல்லாதாரும் ஏனைய குயவர்களும் பிறரும் நிற்குமிடம் ஒன்றேயாம். பார்ப்பனர் பூசிக்கும் கோயில்களில் பூசிக்கும் உரிமை குருக்களுக்கே உண்டு. ஆனால் அதற் கடுத்த இடம் பார்ப்பனருக்கே ரிசர்வ் செய்யப்பட்டிருக்கிறது. ஏனையோர் அடுத்த மண்டபத்தைக் கடக்கக் கூடாது. பெருமாள் கோவில்களை விட சிவன் கோவில்களில் பெரும் வித்தியாசங் காட்டப்படுகிறது. அந்நிய நாடுகளில், அதாவது பர்மா மலாய் நாடுகளில் முருகக் கடவுளுக்கு ஆலயங்கள் காணப்பட்டுள்ளன. அக்கோயில்களில் பூசை செய்வோர் பண்டாரங்களே யாவர். அவர்களது ஒழுக்கும் ஆசாரமும் பயபக்தியும் பதினாயிரம் ஆண்டு தவங்கிடந்தாலும் இந்நாட்டுப் பார்ப்பனருக்கு வரப்போவதில்லை. அவர்கள் செய்யும் பூசை முறையும், நைவேத்தியப் பொருள்களைச் செய்யும் முறையும், ஸ்நானபானம் முதலிய ஒழுங்கும், காலத்தில் கடமை செய்யும் ஒழுங்கும், பணிவான குணமும் கண்டோர் வியக்கத் தக்கனவாகும். அக் கோயில்களில் ஆசாரமுடைய எவரும் பூசை செய்பலாம். ஜாதி வித்தியாசம் ஆண்டில்லை யென்பது குறிப்பிடத் தக்கதாகும். கோயிலில் பூசை வைப்பதற்காக பண்டாரத்திற்கு அளவு கடந்த மதிப்பொன்று மில்லை. அர்ச்சனை செய்த தேங்காய் மூடி முதலிய பிரசாதத்தைக் கொண்டுவந்து வைத்துவிட்டு நின்றபடியாக உத்திரவு பெற்றுப் போவான். அதற்காக ஏற்பட்ட பணம் கொடுக்கப்படும். கோவிலுக்குச் சென்றால் பூசை செய்பவன் என்ற அளவில் பண்டாரத்திற்கு மரியாதை செலுத்தப்படும். அவன் பணிவாக விபூதி முதலிய பிரசாதங்களைத் தருவான். கடவுளைத் தொட்டுப் பூசை செய்வதற்காகத் தான் படைக்கப் பட்டுப் பிர்மாவின் முகத்திலிருந்து பொத்தென்று விழுந்து விட்டதாக அவன் எண்ணுதபடியால் ஒரு ஒழுங்குக்குக் கட்டுபபட்டு ஆண்டவனுக்கு அடங்கித் தன் நிலைமையறிந்து காரியங்கள் செய்கிறான். இப்படியே குயவன் முதலியோரும் நடந்து கொள்வதைக் காணலாம். ஆனால் பார்ப்பானே தாங்கொண்டிருக்கும் திமிருக்கு ஒருஎல்லையில்லை. பல கோயில்களில் பொது ஜனங்கட்கு விபூதி வழங்கும் போது அன்புடையார் காணவும் சகியார். நாய்க்கு எறிவதுபோல மடைப்பள்ளிச் சாம்பலை அள்ளி மண்ணும் கல்லுமாக வீசுவதைக் காணலாம். "எட்டிப்போ; தூவிலகு" என்று கதறித் திட்டித் துரத்துவதையும் பார்க்கலாம். ஐயர் காளாஞ்சியைக் கொண்டுவந்து வீட்டில் கிடக்கிற பெரிய உயரமான ஆசனத்தி லிருந்து கொண்டு கையிலிருக்கிற தேங்காய் மூடியில் அர்ச்சனை செய்யச் சொன்னவாது கைபட்டு விடாமல் திடீரென்று போடுவதைக் காணாதார் யாவர்? அவரை விழுந்து கும்பிட்டுத் தேங்காய் மூடிவாங்க வேண்டிய அவசிய மென்னை? அந்த மனிதனுடைய பிறப்பு உயர்ந்தது என்று நினைக்கும் தப்பான எண்ணமும் பரம்பரையாகப் பழகி ரத்தத்தில் ஊறிப்போனதன் பயனன்றோ இப்படி அடிமைப்படச் செய்திருக்கிறது. இம்மாதிரியான எண்ணம் நமக்கிருப்பதால்தான் அவர்கள் கோயில்களில் நம்மை மிருகமாக நடத்துகின்றனர். சில பணக்காரரின்பணத்துக்குப் ஆசை பட்டுச் சில காரியங்களை இவர்கள் செய்தாலும் பொதுவாகப் பிராமண ரல்லாத ஜன சமூகத்தை இழிவு படுத்துவது கொஞ்சமன்று.

பரம் பொருளின் திருவருளைப் பெறுமிடமாகக் கொள்ளப்பட்டிருக்கும் திருக் கோயில்களில் மனிதர்களில் ஏற்றத் தாழ்வு கருதும் வழக்கம் வர வரப் பலப்பட்டு வருகின்றது. இக் கொடுமையை ஒழித்தல் அவசியமென்று கருதிய வைணவ சமயாசாரியாரான உடையவர், பெருமாள் ஆலயத்தில் இறைவன் திருச் சன்னிதியில் ஜாதி பேதங் கருதக் கூடாதென்று உபதேசித்தனர். பல்வேறு மூண்பட்ட வைணவக் கூட்டம் ஆலயத்தில் பேதம் பாராட்டவில்லை யென்பதைப் பலரும் அறிவர். அங்கும் வர வர பார்ப்பனர்—அல்லாதார் என்ற வித்தியாசம் நுழைந்து வளர ஆரம்பித்திருக்கிறது. எனினும் சிவன் கோவிலைப் போன்ற அபிப்பிராயம் அங்கு கிடையாதென்று கூற வேண்டிய தில்லை.

(தொடரும்)

# செந்தமிழ்ச் செல்வம்.

தமிழ்த்தெய்வ வணக்கம்.



நீராரும் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகும்
சீராரும் வதனமெனத் திகழ்பரத கண்டமிதில்
தக்கசிறு பிறைநுதலும் தரித்தநறுந் திலகமுமே
தெக்கணமும் அதிற்சிறந்த திராவிடநற் றிருநாடும்
அத்திலக வாசனைபோல் அனைத்துலகும் இன்பமுற
எத்திசையும் புகழ்மணக்க இருந்தபெருந் தமிழணங்கே!

பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினும்ஓர்
எல்லையறு பரம்பொருள்முன் னிருந்தபடி யிருப்பதுபோல்
கன்னடமும் களிதெலுங்கும் கவின்மலையா ளமும்துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே ஒன்று பல வாயிடினும்
ஆரியம்போல் உலகவழக் கழிந்தொழிந்து சிதையாவுன்
சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே!

— மனோன்மணீயம்.

குறிப்பு:— இவ் 'வணக்கம்' 'மனோன்மணீயம்' என்னும் நவீன நாடகத்தின் முகப்பில் அழகுபெற அமைந்துள்ள ஓர் அரும்பெறல்மணியாகும். இப்பாடல்களில் தமிழன்னையின்தெய்வ ஒளி ஒருவாறு வெளிப்படுகின்றது.

நீலக்கடலுடுத்த நிலமாமகளுக்கு அழகு ஒழுகும் திருமுகமாகத் திகழ்வது பாரதகண்டம். இம்மதிமுகத்திலே ஞான ஒளி வீசும் 'பிறைநுதல்' தட்சிணம் அல்லது தென்னாடாகும். பிறை நுதலில் இட்ட நறுந்திலகமாக இலங்குவது நம் தமிழ்த்திருநாடு. திலகத்தின் நறுமணமே தமிழ்மொழி. "அத்திலக வாசனை போல் அனைத்துலகும் இன்பமுற—எத்திசையும் புகழ்மணக்க இருந்தபெருந் தமிழணங்கே!" என்று தமிழ்த் தெய்வத்தை ஆர்வத்தோடு அழைக்கும் தண்டமிழ்ச் சொற்களில், இன்பம் நிறைந்து ததும்புகின்றது. "எத்திசையும் புகழ்மணக்க இருந்த பெருந்தமிழணங்கே!" என்னும்போது, இன்பத் தமிழ்மணம் எங்கணும் கமழ்கின்றது. அகிலாண்டகோடிகளை ஈன்றெடுத்த இயற்கைபன்னையை "அன்னையே! பின்னையும் கன்னியென மறைபேசும் ஆனந்தரூப மயிலே!" என்று பெரியோர் வாயார வாழ்த்துகின்றார். அவ்வண்ணமே திராவிட நன் மொழிகளை ஈன்றெடுத்த இயற்கை மென் மொழியாகிய நந்தமிழினை, ஆரியர் வடமொழிபோல் வாழ்விழந்த பழந்தெய்வமாகாது, வாடாத இளமையோடு வளர்ந்தோங்கும் கன்னித் தெய்வமாகக்கருதி வாயார வாழ்த்தி வழிபடுகின்றார். தமிழ்த்தாய் வாழ்க! தமிழ்த் தெய்வம் என்றும் இளமையோடு வளர்ந்திடுக!

——— —தமிழ்த் தொண்டன்.

# காந்தி பேச்சு.

காந்தி குறிப்பிட்ட ஊருக்குச் சென்றார். வண்டி நிற்குமிடத்திலிருந்து ஒரு ஹோட்டலுக்குச் சென்றால் பிறகு போகவேண்டிய இடத்திற்குப் போகலாமென்பது கருத்து. ஒரு ஜட்காவண்டி பிடித்தார். கிராண்ட் நேஷனல் ஹோட்டலுக்குச் சென்றார். ஹோட்டல் மானேஜரிடம் ஒரு இடம் கொடுக்கும்படி கேட்டபோது, காந்தி கறுப்பு மனிதன் ஆதலால்'இடமில்லை; வருந்துகிறேன்' என்று மானேஜர் சொல்லிவிட்டார்.

ஃ ஃ

அதைவிட்டுப் புறப்பட்டார் காந்தி. முகமது காசிம் கடைக்குப் போனபோது அப்துல்கனிசேத், அங்கே காத்திருந்தார், ஹோட்டலில் நடந்த சங்கதியை காந்தி அவர்களுக்குச் சொன்னார். இதைக் கேட்டவுடன் அவர்களுக்குச் சிரிப்புப் பொறுக்க முடியவில்லை. வயிறு வலி எடுக்கும்படி சிரித்தனர். "ஹோட்டலில் இடம் கிடைக்குமென்று எதிர் பார்த்தீர்கள்? பேஷ்! நன்றாயிருக்கிறது!" என்று சொன்னார்கள்.

ஃ ஃ

தென்னாபிரிக்காவுக்குச் சென்ற இந்தியனுக்கு மரியாதை ஏது? சீமைக்குப் போய் பாரிஸ்டர் பரீக்ஷையில் தேறி இருந்தாலும் காந்தி பிறந்த இடம் இந்தியாவல்லவா? படிப்பு எவ்வளவு இருந்தாலும் அறிவு எவ்வளவு இருந்தாலும் தோல் இந்தியத்தோல் அல்லவா?

ஃ ஃ

"காந்தி இவ்வூருக்குப் புதிது. இன்னும் கொஞ்ச நாள் போனால் அவமதிப்புக்கள் சாதாரணமாகிவிடும். பணம் தேடவே வந்திருக்கிறபடியால் அவமானத்தைப் பற்றிக் கவனிக்க முடியுமா" என்று அவர்கள் கூறினர். பின்னர் தென்னாப்பிரிக்காவில் இந்தியர்படும் பாடெல்லாம் காந்திக்கு அவர்கள் விவரமாகச் சொன்னார்கள். முடிவாக காந்தியைப் போன்றவர்கள் இங்கே வசிப்பது முடியாத காரியமென்று அவர்கள் கருதினர்.

ஃ ஃ

ஜோகான்ஸ் பர்க்கிலிருந்து பிரிடோரியாவுக்குப் போகவேண்டும். 'முதல் இரண்டு வகுப்புகளில் இந்தியர் பிரயாணம் செய்ய முடியாது' என்று நண்பர்கள் சொன்னார்கள். இந்தியர்களுக்கு, மூன்றாவது வகுப்புச் சீட்டுத்தான் கிடைக்கும். காந்தி ஒரு யோசனை செய்தார். ஸ்டேஷன் மாஸ்டருக்கு ஒரு கடிதம் எழுதினார். அதில், தான் ஒரு பாரிஸ்டர் என்பதையும் முதல் வகுப்பில் பிரயாணம் செய்பவன் என்பதையும் குறிப்பிட்டிருந்தார். இந்தக் கடிதத்திற்கு "முடியாது" என்று வெகு சுலபமாக பதில் வரக்கூடுமென்று தோன்றியது. "நாளையே நான் புறப்படவேண்டியிருப்பதால் இக்கடிதத்திற்கு பதில் எழுதவேண்டாம். நான் நேரில் பெற்றுக்கொள்ளுகிறேன்" என்று அக் கடிதத்திலே எழுதிவிட்டார் நமது காந்தி.

ஃ ஃ

மறுநாள் ரயிலடிக்குக் காந்தி சென்றார். வெள்ளைக்காரன் மாதிரி போனால் ஸ்டேஷன் மாஸ்டரை வசியப்படுத்திவிடலாமென்பது காந்தியின் கருத்து. கால் சட்டைமேல் சட்டை போட்டுக் கொண்டார். கழுத்துச் சுருக்கும் தொப்பியும் அணிந்து கொண்டார். ஸ்டேஷன் மாஸ்டருக்கு முன்னால் சென்று காந்தி சட்டவட்டமாக நின்றார். ஒரு பவுனை எடுத்து ஜன்னலின் முன்னே வைத்தார்.



காவென் செயும்! வினைதா னென்
செயும்! எனைநாடி வந்த
கோவென் செயும்! கொடுங்கூற்
றென் செயும்! குமரேசரிரு
தாளும் சிலம்பும் சதங்கையும்
தண்டையும் ஷண்முகமும்
தோளும் கடம்பும் எனக்கு முன்
னேவந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்.

குமரன், காரைக்குடி
விபவ - ஞு ஐப்பசி-மீ ௩௦-உ

# உத்தியோகத்தில் - - - - - சீர்திருத்தம்.

சென்னை மாகாணத்தின் அரசாங்க உத்தியோகங்களைப் பார்ப்பன வகுப்பினரே பெரும்பாலும் கைப்பற்றி ஆளுகின்றனரென்பதையும், அந்த வழியாக அவர்கள் சார்புபற்றி அவ்வகுப்பினரே தொடர்ந்து அவ்விடங்களைப்பற்றிக் கொள்கிறார்களென்பதையும் விரித்துக் கூறவேண்டியதில்லை. ஜனத்தொகையில் நூற்றுக்கு மூன்றுவீதமுள்ள பார்ப்பனர் ஒன்றுக்கு முக்கால் பங்கு உத்தியோகங்களைக் கைப்பற்றுவதென்பது எவருக்கும் நியாயமாகத் தோற்ற முடியாது. உத்தியோகத்தில் யாரிருந்தாலென்ன? என்று கூறப்படும் வேதாந்தம் ஏற்றுக்கொள்ளத் தக்கதன்று. பார்ப்பனக்குழுவினர் உத்தியோகம் பார்த்து மாதம் ஒன்றுக்கு ஐயாயிரம், பதினாயிரம் சம்பாதிப்பதோடு, புத்திமானென்றும், மேதாவியென்றும்பிறர்கருதுமாறும், பிறஜனங்களை அடக்கி அதிகாரம் செய்யுமாறும் உள்ள வசதிகளை அடைந்து வருகின்றனர். பார்ப்பனரல்லாத மக்களிற்பலர் பொருளையும், அதிகாரத்தையும், அறிவு வளர்ச்சியையும் பெற வகையில்லாது கிடப்பதைப் பொறுக்க முடியுமோ? அவர்கள் மேலேறிவர வேண்டுமானல் எல்லாருக்கும் சமமாக உத்தியோகங்களைப் பங்கிட்டுக் கொடுப்பதே நேர்மையாகும். எல்லா வகுப்பினரும் சாதாரணமாக உத்தியோகங்களைப் பெறக்கூடுமென்ற நிலை வரும் வரையில் கட்டுப்பாடான சட்டங்களமைக்க வேண்டியது இன்றியமையாததாகும். உத்தியோகத்துறையில் இப்பொழுது பார்ப்பனர் நிறைந்து கிடக்கின்றனர். பார்ப்பனரல்லாதார் தங்கள் ஜனத்தொகைக்கேற்ப மிகுதியிருக்கவில்லை. இந்நிலையில் பெருந்தன்மை பேசி கட்டுப்பாடு செய்தல் குறுகிய புத்தியென்று பேசுவது பார்ப்பனரல்லாதாரை ஏமாற்ற நினைப்பதாகும்.

அரசாங்க உத்தியோகங்களில் பார்ப்பனர் தொகையைக் குறைக்க வேண்டுமென்ற நியாயமான எண்ணம் பலர் மனத்தில் தோன்றியுள்ளது. ஆனல் இப்பொழுது பத்திரப்பதிவு இலாக்காவில் இன்ன விகிதந்தான் உத்தியோகஸ்தர்களை நியமிக்கவேண்டும் என்னும் விதி சென்னை அரசாங்கத்தாரால் செய்யப்பட்டிருக்கிறது. இது நமக்கு மகிழ்ச்சிதரும் செய்தியாகும். இனிப்பத்திரப்பதிவு இலாக்காவில் நியமிக்கப்படவேண்டிய ஸ்தானங்களில் பன்னிரண்டு காலியாகுமானல் அதற்குப் பார்ப்பனரில் இருவரும், பார்ப்பனரல்லாத ஹிந்துக்களில் ஐவரும், மகமதியர்களில் இருவரும், தாழ்த்தப்பட்டவர்களில் ஒருவருமாக நியமிக்கப்பட வேண்டுமென்பது அரசாங்க விதி. இவ்விதி செய்யப்பட்டதிலிருந்து பார்ப்பனரல்லாதாருக்கு சரியான நியாயம் வழங்கப்பட்டு விட்டதென்று கூறமுடியாவிட்டாலும் தற்கால நிலையில் ஒருவாறு நியாயமானதென்றே கூறுவோம். ஜனத்தொகையின் கணக்குப்படி பார்த்தால் பார்ப்பனருக்குப் பன்னிரண்டில் காலேஅரைக்கால் பங்குதான் கிடைக்கவேண்டும். இப்பொழுது பன்னிரண்டில் இரண்டுபங்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. இதைக்கொண்டு பார்ப்பன சமூகத்தினர் கடவுளை வாழ்த்திப் பார்ப்பனரல்லா தாருக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கின்றனர். அவ்வாறன்றிப் பல்லாண்டுகளாக ஏகபோகமாக அனுபவித்து வந்த உத்தியோகங்கள் பிறர் கைக்குப் போகிறதே யென்று அடித்துக் கொள்வதால் ஆவ தொன்றுமில்லை. என்றென்றும் மீளா அடிமைகளாக மனுதர்மம் போன்ற பாழும் ஏட்டுச் சட்டங்களுக்கு உட்பட்டு வாழ பார்ப்பனரல்லாதார் தயாராக இல்லையென்பதைப் பார்ப்பனர் அறிதல் வேண்டும். வீண் கிளர்ச்சிகள் செய்து மற்றவரை அடிமைப் படுத்துவதை உள்நோக்கமாகக் கொண்டு வெளிவேஷம் போடுவது பயனற்ற செயலாகும். தேசத்தில் இதுவரை என்ன நடந்தது? இனி என்ன நடக்கவேண்டுமென்பதைப் பார்ப்பன ரல்லாத மக்கள் இன்று உணர்ந்துவிட்டார்கள். பொய்யும், பித்தலாட்டமுமின்றித் தங்கள் தங்களுக்குள்ள உரிமையை அடைவதற்கு ஒவ்வொருவரும் முயற்சி செய்யவேண்டியது கடமையாகும்.

இத்துறையில் முயன்று தீர்மானத்தைத் தமது இலாகாவில் நடைமுறைக்குக் கொண்டுவர முயற்சித்து விதிசெய்த மந்திரி திருவாளர் எஸ். முத்தையா முதலியா ரவர்களுடைய செயல் என்றும் மறக்க முடியாத தொன்றாகும். பார்ப்பனர்களுடைய ஆரவாரத்திற்கும், கோபத்திற்கும், சூழ்ச்சிக்கும் அஞ்சாது இத்துறையில் திறமையாக நடந்துகொண்ட திரு. முதலியாரவர்களுக்கு நாம் வாழ்த்துக் கூறுகிறோம்.

## "ரிவோல்ட்"

திரு. எஸ். இராமநாதன் M. A., B. L., அவர்களையும், தமிழரின் தலைவர் ஈ. வெ. இராமசாமி நாயக்கரவர்களையும் ஆசிரியர்களாகக் கொண்டு 'ரிவோல்ட்' என்னும் பெயர்கொண்ட ஆங்கில வாரப் பத்திரிகையின் முதலிதழ் வரப்பெற்றோம். கண்ணைக் கவரும் வனப்புடன் உயர்ந்த காகிதத்தில் அழகாக அச்சிடப்பட்டிருக்கிறது. நமது நாட்டில் பார்ப்பனரல்லாத மக்கள் முன்னேற்றத்தைக் குறிக்கோளாகக்கொண்டு எழுந்துள்ள நமது இயக்கத்திற்கு இப் பத்திரிகைப் போராண் செய்வதாகும். தமிழ் நாட்டில் எழுந்துள்ள பார்ப்பனரல்லாதாரியக்கம், பார்ப்பனர்கள் பலகாலாகச் செய்துவந்த பொறுக்கமுடியாத கொடுமையினின்றும் பிறந்த தென்பதை அந்நியர் பலரும் அறிய வகையில்லை. தமிழ் நாட்டுப் பார்ப்பனர் நமது பார்ப்பனரல்லாதார் இயக்கத்தைத் தேசத் துரோக இயக்கமென்றும், உத்தியோக வேட்டைக்காரர் இயக்கமென்றும் குறைகூறி இழிவு படுத்தி வந்தனர். இவர்கள் வாக்கு வெளிநாடுகளிலும் பரவுமாறு ஆங்கிலப் பத்திரிகைகள் வேலை செய்துள்ளன. அப்பொய்க் கூற்றை மறுத்து அந்நியர்களுடைய மனத்திலும், 'நமது இயக்கம் புனிதமுடையது; இன்றியமையாதது' என்ற எண்ணங்கள் உண்டாக்குவதற்கு ஆங்கிலப் பத்திரிகைகள் தோனறவேண்டியது அவசியமாகும். 'ஜஸ்டிஸ்' பத்திரிகையொன்றே நமது இயக்கத்தைத் தாங்கி இதுகாறும் தொண்டாற்றி வருகின்றது. அந்நிய நாடுகளிலும் சென்று கொள்கையைப் பிரசாரம் செய்வதற்குத் தினசரி வர்த்தமானப் பத்திரிகைகளை விட வாரப்பதிப்பே சாலச் சிறப்புடையதாகும். இங்ஙனங்கொண்டே 'ரிவோல்ட்' வெளியாகி யிருக்கிறது. இதற்கு ஆசிரியர்களாகவிருக்கும் இருவரையும்பற்றி நாம் அதிகம் கூறவேண்டியதில்லை. திரு. இராமநாதன் பேரறிஞர்; உண்மையாளர்; நாட்டுப்பற்றுடையவர்; பெருந்தியாகி; சிறந்த கல்வியாளர்; நல்ல இளைஞர். இவரை ஆசிரியராகக் கொண்டு வெளிவரும் 'ரிவோல்ட்' எல்லா நலனும் பெற்று நீடூழி வாழ்வதாக. நமது நேயர்கள் ஒவ்வொருவரும் இதற்கு உதவிபுரிய வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறோம். இதன் ஆண்டுக் கட்டணம் உள்நாட்டிற்கு ரூபாய் நான்கு; வெளிநாட்டிற்கு ரூபாய் ஐந்து; மாணவர்களுக்கு ரூபாய் மூன்று.

## எண்டிசைக் காட்சி.

**நமது பத்திரிகை.**

தீபாவளியை முன்னிட்டு இவ்வாரத்தில நமது காரியாலய விடுமுறையை ஒட்டி நமது பத்திரிகை பக்கங்கள் சிறிது குறைவுற்று வெளிவருகின்றது.

**தமிழ்த் தொண்டன்.**

நமது பத்திரிகையின ஐந்தாம்பக்கத்தில் பாக்கள் வெளியிடுவ தென்ற ஓர் முறை கையாளப் பட்டு வருவது நேயர்கள் அறிந்ததாகும். செந்தமிழ்த் திருமொழியில் அழகான இலக்கியங்கள் பலவுள்ளன. அவைகள் தமிழ் நாட்டில் தமிழ் மக்களின் கவனத்திற்கு வர வழியின்றிக் கிடக்கின்றன. அவ்விலக்கிய நூல்களிலிருந்து சில அருமணிகளைத் தெள்ளி யெடுத்து மக்கட்கு நல்க ஒரு தமிழன்பர் முன் வந்துள்ளார். அவை முறையே வெளிவரும். அவற்றைப் படித்துத் தமிழன்னையின் இன்னருளை நமது நேயர்கள் பெற வேண்டுகிறோம்.

## உள்ளூர்ச் செய்தி.

| | |
|---|---|
| நடப்பு வெப்பநிலை:— | ௮௦ டிக்ரி. |
| சென்னை உண்டியல் வட்டம் | ௦—௬—௦. |
| பவுன் விலை | ௧௩—௬—௦. |
| சீமை வெள்ளிக்கட்டி | ௧௦—௧௨—௦. |

காலநிலை:— இவ்வாரத்தில் அடிக்கடி மழை பெய்துகொண்டேயிருக்கிறது. முனிசிபாலிடியார் ஆங்காங்கே ரோடுகளை ஒழுங்குபடுத்தி வருகின்றனர்.

காங்கிரஸ் கதர் ஸ்டோர்:—இவ்வருட தீபாவளி பண்டிகையை முன்னிட்டு, சென்ற ஒருமாத காலத்தில், எண்ணூற்றுத்து அறுநூற்று முப்பது ரூபா, இரண்டணா, மூன்று பைசாவுக்கு கதர் விற்பனையாயிருக்கின்றதென மேற்படி ஸ்டோர் மானேஜர் அறிவிக்கிறார்.

### முனிசிபல் பாடசாலை திறப்பு விழா.

(நமது நிருபரிடமிருந்து)

செஞ்சை ஊருணிக்குத் தென்புறத்தில், முனிசிபாலிடியின் ஆதரவில், இன்று மாலை மூன்று மணிக்கு ஒரு இலவச ஆரம்ப பாடசாலை திறக்கப்படும்.

## தந்திச் செய்தி.

பினங்கு ஐப்பசி-மீ ௨௮-உ

| | |
|---|---|
| உண்டியல் விலை | நூற்று ஐம்பத்து நான்கு. |
| ஈயம் விலை | நூற்றுப் பன்னிரண்டு. |
| ரப்பர் விலை | முப்பத்தெட்டு. |

சைகோன் ஐப்பசி-மீ ௨௮-உ

| | |
|---|---|
| உண்டியல் விலை | நூற்று முப்பத்தாறு. |
| சிங்கப்பூர் வட்டம் | பதின்மூன்றே முக்கால். |

ரங்கூன் ஐப்பசி-மீ ௨௯-உ

| | |
|---|---|
| தவணை வட்டி | ௦-௬-௦ |
| பழைய பவுன் | ௧௩-௮-௬ |
| புதிய பவுன் | ௧௩-௯-௬ |
| படகு நெல் | ௧௬௫-௦-௦ |
| ரயில் நெல் | ௧௬௫-௦-௦ |
| சிறிய மில் அரிசி | ௪௬௫ |
| மீடான் அரிசி | ௫௨௫ |
| வெளியூர் விலைகள்:— | |
| நவம்பர் | ௪௬௫ |
| டிசம்பர் | ௪௬௦ |
| மூன்று மாதங்கட்கு | ௧௪௦ |

## லண்டன் மார்க்கெட்.

(From "Hindu")

நவம்பர் ௬-உ

ரப்பர்: புகைபோட்டது, ஸ்டாண்டர்ட் ஸ்பாட் வாங்குகிறவர்களுக்கு விலை எட்டரை மூன்று வீசம் பென்ஸ்.

ஷை விற்பவர்களுக்கு விலை எட்டே முக்கால் பென்ஸ்.

பேல் கிரீப் ஸ்பாட், வாங்குபவர் விலை எட்டே முக்காலரைக்கால் பென்ஸ்.

ஷை விற்பவர் விலை ஒன்பது பென்ஸ்.

மார்க்கெட் ஒரேநிலையிலிருக்கிறது.

நயம் பார்தங்கம் அவுன்ஸ் ஒன்றுக்கு நாலு பவுன், நாலு ஷிலிங் பதினொன்றரை பென்ஸ்.

செய்பு முதல்தரம் எழுபத்து மூன்றே அரைக்கால் பவுன்.

ஷை பிரேலியர்ஸ் எண்பத்திரண்டேகால் பவுன்.

வெள்ளி, ஸ்பாட் இருபத்தாறரை மூன்றுவீசம்பவுன்.

ஷை பார்வர்டு இருபத்தாறே முக்கால் பவுன்.

சென்னை

நவம்பர் ௧௦-உ

பாங்கியில் மலாய்காட்டு உண்டியல் விலை விற்பது நூற்றைம்பத்தேழு.

ஷை வாங்குவது நூற்றைம்பத்திரண்டு.

இம்பீரியல் பாங்கி வட்டி ஐந்து பெர்சண்டு.

இங்கிலாந்து பாங்கிவட்டி நாலரை பெர்சண்டு.



## கப்பற் செய்தி.

"சாண்டில்லி" கப்பல், நவம்பர் உ௮-ம் தேதி, புதுச்சேரியிலிருந்து, சிங்கப்பூர் சைகோன் முதலியவிடங்களுக்குப் பிரயாணமாகும்.

## புதுக்கோட்டை மன்னரின் முடிசூட்டு விழா.

புதுக்கோட்டை அரசாங்க கெஸட்டில் முடிசூட்டு விழாவைப்பற்றி வெளியாயிருக்கும் அறிக்கை வருமாறு:—

௧௯௨௮-ம் ஞு நவம்பர்மீ ௧௯௨ திங்கட்கிழமை காலை ௧—௩௦ மணிக்கு புதுக்கோட்டை ராஜ அரண்மனை சதுக்கத்தில் அமைக்கப்படும் கூடாரத்தில் சென்னை சமஸ்தானங்களுக்கு மகா-ா-ா-ஸ்ரீ கவர்னர் ஜனரல் அவர்களின் ஏஜண்டு அவர்கள் நமது ஸமஸ்தானத்து புதிய அரசருக்கு பட்டம் அளிக்க ஒரு தர்பார் நடத்துவார். அந்த தினம் (௧௯—௧௧—௧௯௨௮) பொது விடுமுறை நாளென்று இதன் மூலம் பிரசித்தம் செய்யப்படுகிறது. எல்லா தலைமை அதிகாரிகளும் ௯௦-ரூ அல்லது அதற்குமேல் சம்பளம் வாங்கும் நகரிலுள்ள எல்லா ஆபீஸர்களும், எல்லா ஸர்தார்களும் குரிகாரர்களும் மேற்படி தர்பாருக்கு ஆஜராக வேண்டியது. ராஜ அரண்மனை சதுக்கத்துக்கு பொதுஜனங்கள் யாவரும் வரவேணுமாய் அழைக்கப்படுகிறார்கள்; கூடாரத்திற்குள் வரவேண்டுமென்று இஷ்டப்படும் உத்தியோகஸ்தரல்லாதவர்கள் கவர்ன்மெண்டாரின் சீப் செகரெடரியிடம் தங்கள் இஷ்டத்தைத் தெரியப்படுத்தினல், அவர் அனுமதிச் சீட்டுகள் கொடுப்பார்; மேற்படி கூடாரத்திற்குள் இடம் குறைச்சலாயிருப்பதை முன்னிட்டு, முக்கியமான சிலர்களுக்குத்தான் அனுமதிச் சீட்டு கொடுக்கப்படும். அரண்மனையில் முக்கியமான விசேஷ காலங்களில் எந்த விதமான உடுப்புத் தரித்துவர வேண்டுமோ அந்த மாதிரி உடுப்பையே மேற்படி தர்பாருக்கு வருகிறவர்கள் எல்லோரும் தரித்துக் கொள்ளவேண்டும். ஸ்ரீ திருக்கோகர்ணம் கோவிலில் அதேதினம் (௧௯-௧௧-௨௮) மாலை ௩-௩௦ மணிக்கு பட்டாபிஷேகம் நடைபெறும். ஹிந்து தலைமை அதிகாரிகள் மட்டும் கோவிலில் மேற்படி பட்டாபிஷேகத்துக்கு வரவேண்டும். கோவிலில் பட்டாபிஷேகம் முடிந்தவுடன் மகா-ா-ா-ஸ்ரீ மகாராஜா அவர்கள் அரண்மனையிலுள்ள தர்பார்ஹாலுக்கு ஸவாலனுக்களுடன் பவனிவந்து தர்பார் நடத்துவார்கள். தலைமை அதிகாரிகளும் ஸர்தார்களும், குரிகாரர்களும் மேற்படி ஊர்வலத்துடன் வரவேண்டியதில்லை. அன்றையதினம் பட்டாபிஷேக பிரயுக்தமாய் வெகுவான காரியங்களைச் செய்ய வேண்டியிருக்கும். மகா-ா-ா-ஸ்ரீ மஹாராஜா அவர்களுக்குப் பின்னும் பவனி வருகையில் இடையிடையே மாலையிடுவதினல் அதிகசிரமம் ஏற்படும் என்பதை முன்னிட்டு மகா-ா-ா-ஸ்ரீ மஹாராஜா அவர்களுக்கும், மகா-ா-ா-ஸ்ரீ ரீஜெண்டு ஸாஹேப் அவர்களுக்கும் ஊர்வலத்தில் மாலையிடுவதற்கு உரிமையுள்ள தலைமை அதிகாரிகளும், மற்றவர்களும் அவ்வுரிமையை செலுத்தாமலிருக்கும்படி அதாவது, அவர்களுக்கு மாலையிடாமலிருக்கும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். எல்லா (ஸ்திரீகளல்லாத) தலைமை உத்தியோகஸ்தர்களும், ஸர்தார்களும், குரிகாரர்களும், அரண்மனை வித்வான்களும். ரூ ௧௦௦-ம் அதற்கு மேலும் சம்பளம் பெறும் எல்லா உத்தியோகஸ்தர்களும் மேற்படி தர்பாருக்கு வரவேண்டியது. அவர்கள் வழக்கப்படி ஏற்பட்ட நஜரை செலுத்த வேண்டியது. அந்த நஜர் பணமாக இருந்தால் தொட்டுவாபஸ் செய்யப்படும்.

பி. கே. குன்னுண்ணி மேனன்,
௧௨—௧௧—௨௮. திவான்.

## கடிதங்கள்.

**இராயவரம்.**

(நமது நிருபரிடமிருந்து)

பொதுக் கூட்டம்:— நிகழும் ஐப்பசித் திங்கள் உ௯-ம் நாள் மாலை ௪ மணிக்கு திரு. சு. கதி. கதிரேசன் செட்டியாரவர்களால் நடாத்தப் பெறும் ராயவரம் காந்தி பாடசாலையில் வைத்து, பொதுக் கூட்டமொன்று ஷை பாடசாலை தலைமை ஆசிரியர் லெ. அனந்தன் அவர்கள் தலைமையின் கீழ் நடந்தது. அவ்வமயம் திருவாளர்களான சு. ப. முத்தாராமன் செட்டியாரும், கு. ம. முத்தையா செட்டியாரும், தே. அழகப்பச் செட்டியாரும், முறையே 'கதர், தீபாவளிப் பண்டிகை, ஜீவகாருண்யம்' எனும் பொருள்களைப் பற்றிச் சொற்பொழிவு நிகழ்த்தினர்கள். தலைவரவர்கள் முடிவுரை முகவுரை இரண்டிலும் கதரின் சிறப்பு, சுயமரியாதை ஆகியவை பற்றி சுமார் ஒரு மணி நேரம் வரை நன்கு எடுத்து உரைத்தார்கள். ஆடவர், பெண்டிர் இருபாலருமாக சுமார் ௧௦௦ பெயர்கள் கூடியிருந்தார்கள். இக் கூட்டத்தில் பெரும்பாலும் இளைஞர்களே கூடியிருந்தார்களென்பது குறிப்பிடத்தக்கது.

**ராமச்சந்திரபுரம்.**

(ஒரு நிருபரிடமிருந்து)

ஓர் பிரிவு உபசாரம்:— புதுக்கோட்டை சமஸ்தானம் ராமச்சந்திரபுரம் ஸ்ரீ பிரும்ம வித்யாம்பாள் எலக்ட்ரிக் ஸப்ளை கார்ப்பரேஷன் டைரக்டர்களால் ஷை கார்ப்பரேஷன் ஆரம்பகாலம் முதல் சென்ற மூன்று வருஷங்களாக மானேஜிங் டைரக்டர் பதவியை வகித்து வந்த திவான் பகதூர் தருமபூஷணம் ஸ்ரீமான் தி. நா. முத்தையா செட்டியார் அவர்களுக்கு ஓர் தேக்கச்சேரி நடத்தப் பெற்றது. நகரத்தார்கள் பலரும் ஏனையோரும் நூற்றுக் கணக்காக விஜயம் செய்திருந்தார்கள். டைரக்டர்களின் சார்பாக மகா-ா-ா-ஸ்ரீ பி. கு. பி. சு. ராமஞ்செட்டியார் அவர்களும் ஷப்பந்திகளின் சார்பாக மானேஜர் மகா-ா-ா-ஸ்ரீ சாம்பமூர்த்தி சாஸ்திரிகளும் தனித்தனியே உபசாரப் பத்திரங்களை வாசித்துக் கொடுத்தார்கள். ஷை உபசாரப் பத்திரங்களுக்குத் தக்கவாறு பதிலுரைத்தவுடன் ஸ்ரீமான் செட்டியார் அவர்களுக்கு புதிதாக தேர்ந்தெடுக்கப்பட்ட மானேஜிங் டைரக்டர் மகா-ா-ா-ஸ்ரீ தி. சு. ராம. ராமஸாமி செட்டியாரவர்களுக்கும் மலர் மாலைகள் வழங்கப்பட்டன. பின் சந்தன தாம்பூலம் வழங்கி வைபவம் நன்கு முடிவுற்றது. எலக்ட்ரிக் விளக்கு அலங்காரங்கள் நக்ஷத்திரங்கள் போல் பிரகாசித்தன.

**சவுங்கோம்.**

ஸ்ரீ லக்ஷ்மிவிலாச சங்கம்:— இச்சங்கத்தின் முதலாவதாண்டு மூன்றுவது மாதக் கூட்டம் நாளிது ஐப்பசித் திங்கள் பதினேந்தாம் நாள் பிற்பகலில் கும்பியோ திருவாளர், பழ. அரு. மெ. கருப்பஞ் செட்டியாரவர்கள் தலைமையின் கீழ் நடைபெற்றது. கடவுள் வணக்கம் முடிந்ததும் திரு. பழனியப்பா அவர்கள் 'அருள்' என்னும் பொருள்பற்றியும், திரு. அருணசலச் செட்டியாரவர்கள் 'திருநீலகண்டர்' என்னும் பொருள்பற்றியும், போஸ்ட் மாஸ்டர் திரு. டி. எம். ஆனந்தம்பிள்ளையவர்கள் 'ஒற்றுமை' என்னும் பொருள் பற்றியும், திரு. முத்தராமலிங்கம் பிள்ளையவர்கள் 'தாய பக்தியும் தொண்டர் பெருமையும்' என்னும் பொருள்பற்றியும், திரு. சாமிநாதனவர்கள் 'இன்சொல்' என்னும் பொருள்பற்றியும், மிக ருசிகரமாகவும் சபையோரனைவரும் ஆனந்தமடையும்படியாகவும், பல மேற்கோள்களுடன் உபந்யசித்தார்கள். பின்னர் தலைவரவர்களால் முடிவுரை கூறப்பெற்று வந்தனோபசாரத்துடன் மங்களகீதம் பாடி இரவு ௧௦—௩௦ மணிக்கு சபை இனிது நிறைவெய்தியது என்று காரியதரிசி அழ. பெரி. அழ. அழகப்பசெட்டியார் அறிவிக்கிறார்.

## காரைக்குடி

ஹைஸ்கூல்

௧௯௨௭-௨௮-ம் வருட அறிக்கை.

இவ் வித்தியாசாலை ஆரம்பிக்கப்பெற்று பதினேந்து வருடங்களாகின்றன; இது அரசாங்கத்தாரால் அங்கீகாரம் பெற்று பதின்மூன்று ஆண்டுகளாகின்றன. இதற்கு முந்திய வருடத்திய மாணவர் தொகை ௨௭௨; இவ் வருடத்திய தொகை ௨௭௦. இதில் பிராமணர் தொகை ௧௨௯-நூற்றுக்கு ஐம்பத்தைந்து வீதமாகின்றது. மீதியான ௧௧௭ பேரில், ௨௬ பேர் நகரத்தார் சமூகத்தைச் சேர்ந்தவர்; ௬௧ பேர் பிற இந்து வகுப்பினர்; டூபேர் மகமதியர்; ௪பேர் கிறிஸ்தவர். ஒவ்வொரு வகுப்பிற்கு ஒருவர் வீதம் அ ஆசிரியர்களும், தலைமை ஆசிரியரும், தமிழ், வடமொழி பண்டிதர்களும், படம் வரைதல், தேகாப்பியாசம் இவற்றிற்கு ஒரு ஆசிரியரும், இருந்தனர். அ ஆசிரியர்களில் இருவரைத்தவிர மற்றவர் யாவரும் போதனமுறை கற்றவராவர். இதில் மூவர் பி. எ., யல். டி., பட்டங்கள் பெற்றவர்.

பள்ளிக்கூடத்தின் நோக்கங்களிலொன்றுகிய இந்து மத போதனை எல்லா வகுப்புகளிலும் கற்பிக்கப்படுகிறது. ஆனல் இஃதல்லாத மாணவர் இதிற் கலந்து கொள்ள நிர்ப்பந்திக்கப்படவில்லை. ஐந்து ஆறுவது வகுப்புகளில், வியாபாரக் கணக்கு முறைகளே, வியாபார சம்பந்தமான விஷயங்களில் தேர்ச்சி பெற்ற ஒரு ஆசிரியர் கற்பித்து வந்தார். ௧௯௨௭-ம் வருடத்து யஸ். யஸ். யல். ஸி. பரீட்சையில் எழுதிய ௨௭பேர்களில், ௧௫பேர் தேறினர், ௧௯௨௮-ம் வருடத்து பரீட்சையில், ௨௬பேர் கட்டு, ௧௨பேர் தேறியிருந்தனர்.

புட்பால், பாட்மின்டன், சடுகுடு, வாலிபால் ஆகிய விளையாட்டுக்கள் மாணவரால் விளையாடப்பட்டன. கலாசாலையின் இவ் வருடத்திய செலவு ரூ ௨௨,௭௯௬—௩௦—௫ ஆகும். ௧௯௨௭-௨௮ம் வருடத்தின் செலவு ரூ ௨௨,௫௫௪-௧௩-௧ ஆகும். மொத்த செலவில் நூற்றுக்கு ௫௨௫ பாகம் மாணவர் சம்பளத்தாலும், ௨௮ பாகம் அரசாங்கத்தார் கொடுக்கும் நன் கொடையாலும், மீதமுள்ள ௯௨௫ பாகம் மானேஜ் மென்றும் கொண்டிருப்பதாயிருக்கிறது. தேவகோட்டை பள்ளத்தூர் இவ் விரண்டிடங்களிலுமுள்ள பள்ளிக்கூடங்கள் ஹைஸ்கூல்களாக உயர்த்தப்பட்டு விட்டபடியால், மாணவர் விதிதி பிலுறைத்தோரின் தொகை, பதினுறிலிருந்து எட்டாகக் குறைந்துவிட்டது.

## நோட்டீஸ்.

தாராவாடி
அடிஷனல் டிஸ்ட்டிரிக்ட்
கோர்ட்டு.

சிவில் ரெகுலர் சூட் No. 23.
1928-ல் பிரப்பிக்கப்பட்ட சமன்.

வாதிகள்
லேப்படான்.
சு. அரு. அருணசலஞ் செட்டியார்
சு. சோம. சோமசுந்தரஞ் செட்டியார்.
சு. சுப. சுப்பிரமணியஞ் செட்டியார்.

பிரதிவாதிகள்.
சிக்குயின்
மவுங்போக்கன்
மாலூன்மாககலே
மு. பெஅ. அழகப்ப செட்டியார்.

மு. பெஅ. அழகப்ப செட்டியாருக்கு அறிவிப்பதாவது:—

வாதிகளுக்குள்ள மார்க்கேஜ் தொகை ரூ 6917-0-0 வசூலிக்கும் பொருட்டு என்னுடைய கோர்ட்டில் மவுங்போக்கன் மாலூன்மாககலேயும் மு. பெஅ. அழகப்ப செட்டியாராகிய தம்மை இரண்டாவது மார்க்கேஜ்காரப் பிரதிவாதியாகவும் சேர்க்கப்பட்டிருக்கிறது. இந்த கேஸ் 1928ஞு நவம்பர்மீ 24உ ஆக வாய்தா ஏற்பட்டிருக்கிறது. மேல்கண்ட தேதியில் நீங்களாவது உங்களுடைய ஏஜண்டாவது என் முன்பாக ஆஜராகத் தவறினல் ஷை வியாஜ்ஜியத்தை ஒருதலைப் பக்ஷமாகத் தீர்ப்புச் செய்யப்படும். கோர்ட்டு முத்திரையுடன் 1928ஞு நவம்பர் மாதம் 7உ என்னல் கொடுக்கப்பட்டது. (ஒப்பம்)

கின்கை. பெஞ்ச் கிளார்க்கு,
அடிஷனல் டிஸ்ட்டிரிக்ட்
கோர்ட்டு ஜட்ஜிக்காக.

## காரைக்குடி முனிசிபல் கூட்டம்.

(நமது நிருபரிடமிருந்து)

ஐப்பசிமீ உ௯உ புதன்கிழமை (நேற்று) மாலை ஐந்து மணிக்கு முனிசிபாலிட்டியின் விசேஷக் கூட்டமொன்று முனிசிபல் ஹாலில் தலைவர் திரு. திருவேங்கட முதலியார் தலைமையில் நடைபெற்றது. திருவாளர்களான சி. மு. அரு. முத்தராமன் செட்டியார், செ. ஈ. ராம. நாராயணஞ் செட்டியார் ஆகிய இருவர் தவிர மற்ற பதினுறு அங்கத்தினர்கள் ஆஜராயிருந்தனர்.

**சாங்க்ஷன் செய்யப்பட்டன.**

ரோடுகள் பழுது பார்ப்பதற்காக ரூ. ௭௫௦-௦-௦ அனுமதிக்கப்பட்டது. சென்னைப் பத்திரிகையில் செய்த விளம்பரச் சார்ஜ் ரூபாய் இருபது அனுமதிக்கப்பட்டது. இரண்டு சானிட்டரி இன்ஸ்பெக்டர்களுக்கு சைக்கிள் அலவன்ஸ் மாதம் ஒன்றுக்கு ரூபாய் ஐந்து வீதமும், சர்வேயருக்கு மாதம் ஒன்றுக்கு ரூபாய் ஐந்தும் அனுமதிக்கப்பட்டன.

**ஆரம்பப் பள்ளிக்கூடம்.**

ஆதி திராவிடர்களுக்கு ஓர் பள்ளிக்கூடம் ஏற்படுத்த வேண்டுமென்று ராவ் பகதூர் செம்பரம் செட்டியார் கொண்டுவந்த பிரேரேபணையைத் திருவாளர்களான முரு. வீர. சாமிநாதன் செட்டியார், வீ. செ. ஸ். செம்பரம் செட்டியார் ஆகியவர்கள் ஆதரித்தார்கள். தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது.

**டோல் கேட்.**

சென்ற வாரம் குறிப்பிட்ட இடங்களில் அமராவதி புதூர் ரோடு தவிர ஏனைய ஆறு இடங்களிலும் வைக்கப்படும் டோல் கேட்டுக்கள் டிசம்பர்-மீ ௧-உ முதல் மார்ச்சு-மீ ௩௧-உயோடு முடிவுறும் நான்கு மாதங்கட்கு ஏலம் கூறப்பட்டன. இந்த ஏலம் கூடும் சமயத்தில் கண்டிராக்டேக்காரர்களும் மற்ற ஜனங்களும் ஏராளமாகக் கூடியிருந்தனர். கண்டிராக்டு எடுக்க வந்தவர்கள் முனிசிபல் ஆபிஸினுள் இடமளிக்கப்பட்டிருந்தனர். எலப்போட்டி பலமாக இருந்தது. ஐயாயிரம் ரூபாயிலிருந்து ஏலம் கூறப்பட்டது. கடைசியில் ரூ. ௯௯௬௦௦-ர்கு திருப்பத்தூர் பி. பி. முகமது இபுராஹிம் ராவுத்தருக்கு விடப்பட்டது. வெளியூர் கார்களுக்கு முனிசிபாலிட்டியில் லைசென்ஸ் கொடுப்பதில்லை யென்றும் முடிவு செய்யப்பட்டது.

**ஹாஸ்பிற்றல்.**

இவ்வூர் முனிசிபல் ஹாஸ்பிற்றலுக்கு ஆகும் செலவில் தேவகோட்டை தாலூகா போர்டிலிருந்து ஒரு பகுதி உதவி கேட்பதென்று தீர்மானிக்கப்பெற்றது.

இத்துடன் ௭-௩௦-மணிக்குக் கூட்டம் முடிந்தது.

**பிழை திருத்தம்.**

சென்ற வாரம் வெளிவந்த 'குமரன்' ௭-வது பக்கத்தில் பிரசுரிக்கப்பட்டிருக்கும் காரைக்குடி முனிசிபாலிட்டி கிழச்சியில், 'ஒப்பந்தங்கள்' என்ற தலைப்பின் கீழ், "ஐந்து ரூபாய்க்கு மேல் போகாமல் சுவுன்சில் சாங்க்ஷன் பெற்றிருக்கும் ஒப்பந்தங்களைத் தலைவரே செய்யலாமென்ற ஆபீஸ் நோட்டு அங்கீகரிக்கப்பட்டது" என்றிருப்பதில், ஐந்துரூபாயை, இருநூற்றைம்பது ரூபாயெனத்திருத்தி வாசித்துக் கொள்ளவேண்டுகிறேன்.

மேற்படி பக்கத்தில், வரிபோடுவதற்காக நியமிக்கப்படும் ஸ்பெஷல் ஆபீசருக்கு உடனிருந்து அவ்வேலையில் உதவி செய்யும் பொருட்டு நியமிக்கப்பட்டிருக்கும் கமிட்டியில், 'வெ. ராம. லெ. இராமசாமி செட்டியார்' என்றிருப்பதற்கு பதிலாக 'ப. ராம. பழ. ராம. பழனியப்ப செட்டியார்' என்று திருத்திக் கொள்ளவேண்டுகிறேன்.

## உத்தியோக மாற்றம்.

(நமது நிருபரிடமிருந்து)

இவ்வூர் சர்க்கிள் இன்ஸ்பெக்டராக இருந்து பொது ஜனங்களுடைய முழுக்கவனத்தையும் ஈர்த்து அருந்தொண்டாற்றிய திரு. சாத்தப்பபிள்ளை அவர்கள் புதுக்கோட்டைக்கு மாற்றப்பட்டார்கள். இச்செய்தி பலருக்கும் வருத்தத்தைத் தருமென்பதில் சந்தேகமில்லை.

# ஹைஸ்கூலில் விழா.

(நமது நிருபரிடமிருந்து)

உள்ளூர் ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேசுவர வித்தியாசாலையில், ஐப்பசிமீ உஉ-ம் தேதி மாலை ச.௩௦ மணிக்கு, வித்தியாசாலைத் தலைவர் ராவ் பகதூர் ஆவி. பழ. சிதம்பரஞ்செட்டியாரவர்கள் பிறந்த நாட் கொண்டாட்டமும் மாணவர்களுக்குப் பரிசளிப்பும் இனிது நடைபெற்றன. கலாசாலை தோரணங்களால் அலங்கரிக்கப் பட்டிருந்தது. ஹாலில் ஒரு புறம் ஹைஸ்கூல் மாணவர்களும் பெண் பாடசாலை மாணவிகளும் அமர்ந்திருந்தனர். மற்றொரு புறத்தில் கனவான்கள் அமர்ந்திருந்தனர். தனவைசியப் பிரமுகர்களும், நகரவாசிகளும் உத்தியோகஸ்தர்களும் பழைய மாணவர்களுமாக உள்ளூர் வெளியூர்களி லிருந்து பலர் வந்திருந்தனர். தேவகோட்டை டிவிஷனலாபீசர், தேவகோட்டை டிஸ்டிரிக்ட் முன்சீபு, அடிஷனல் சப் ஜட்ஜ், போலீஸ் டிப்டி சூப்ரின்டன்டன்டு, ராவ் பகதூர் சு. அ. சு. ராமநாதன் செட்டியார், ராவ் சாகிப் மரு. சுப்பையா செட்டியார், தேவகோட்டை வக்கீல் சுப்பன் பி. ஏ., பி. எல். ஆகியவர்கள் வந்திருந்தது குறிப்பிடத் தக்கது. வாத்தியகோஷத்துடன் வரவேற்கப்பெற்று தேவகோட்டை சப்ஜட்ஜ் திருவாளர் பி. வெங்கட்டராவ் பி. ஏ., பி. எல். அவர்கள் அக்ராசனம் வகித்தனர். கடவுள் வாழ்த்துப்பாடியபின் ஹெட்மாஸ்டரவர்கள் விழாவைப்பற்றிச் சில குறிப்புகளைச் சொன்னார்கள். மேடைமீது ராவ் பகதூர் சிதம்பரஞ்செட்டியாரவர்களும் விழாத் தலைவரும் அமர்ந்திருந்தனர். இருவருக்கும் ஜரிகை மாலை இடப்பெற்றது. பின்னர் மாணவர்களுடைய பாட்டு, பேச்சு, நடிப்பு ஆகியவைகள் நடைபெற்றன. முதலில் ஒரு குயவன் கதை ஆங்கிலத்தில் அழகாக உணர்ச்சியுடன் நடிக்கப்பெற்றது. பின்னர் மாணிக்கவாசகர் வரலாற்றில் ஒருபகுதி தமிழில் நடித்துக் காட்டப்பெற்றது. அப்பால் ஒரு மாணவர் குழாய் ஒன்றினால் மிக உருக்கமாக இன்னிசைபாடி எல்லோரையும் மகிழ்வித்தார். A. சுப்பையா எனும் தனவைசிய மாணவர் ஆங்கிலத்தில் இளமை என்பதைப் பற்றி மிக அழகாக ஒரு கட்டுரையை ஒப்புவித்தார். சமஸ்கிருதத்தில் பிரகலாதன் கதையில் ஒரு பகுதி நடிக்கப்பெற்றது. அதில் சமஸ்கிருதப் பயிற்சி பெறத் தகுதியற்றவர்போல் வேண்டுமென்று உளறி நடிக்கும் மாணவராக ஒரு பிராமணரல்லாதாரை ஏற்படுத்திப் பேசச் செய்திருந்தது ஒருவகையில் வருத்தம் தருவதேயாகும். பிராமண ரல்லாதார் சமஸ்கிருதப் பயிற்சி பெறுதல் இயலாதென்று பரிகசிப்பது போல் அது சிலருக்கு உணர்ச்சியை உண்டாக்கிற்று. மாணவர்கள் பேச்சு முதலியவைகள் முடிந்தபின்னர் ஹெட்மாஸ்டரவர்கள் ககஉஅ-ஆண்டு அறிக்கையை வாசித்தார். பின்னர் மாணவர்களுக்குப் பரிசுகள் வழங்கப் பெற்றன. பிறகு தலைவரவர்கள் முடிவுரையாகக் கூறியதில் சில முக்கிய குறிப்புக்கள் வருமாறு:- "என்னை இவ்விழாவிற்குத் தலைமை வகிக்கும்படி செய்ததற்குப் பெரிதும் நன்றி கூறுகிறேன். பரிசளிப்பு விழாவும், பிறந்த தினமும் சேர்ந்து ஒன்றாக நடைபெறுவது மகிழ்ச்சியளிக்கிறது. கலாசாலையின் பெருங்கொடையாளராகிய சிதம்பரஞ் செட்டியாரவர்களுக்கு நீண்டவாழ்வும் பல நன்மைகளும் மிகும்படி வாழ்த்துகிறேன். (கரகோஷம்) இன்று தமது பேச்சு நடிப்பு ஆகியவற்றால் எல்லோரையும் மகிழ்வித்த மாணவர்களையும், திறமையாகப் பயிற்றுவித்துள்ள ஆசிரியர்களையும் பாராட்டுகிறேன். காலஞ்சென்ற காமேஸ்வர ஐயரவர்களுக்குப் பதிலாக வேறு ஆசிரியர் சங்கீதம் பயிற்றுவித்தலை மேற்கொள்ளும்படி வேண்டுகிறேன். புத்தகசாலையிலிருந்து மாணவரும், ஆசிரியரும் அதிகம் புத்தகங்களை எடுத்துப் பயின்றிருக்கின்றனரென அறிந்து மிக மகிழ்கிறேன். மாணவர்களுக்கும் பயன்படும்படியான புத்தகங்களை மிகுதியாகத் தொகுத்து ஒழுங்காக வகுத்து வைத்தல் பயனுடையதாகும். தேகப் பயிற்சியில் அதிக கவனம் செலுத்துதல் வேண்டும். விளையாடுதற்கு நல்ல இடம் அமைய வேண்டுவது இன்றியமையாததாகும். மாணவர்கள் நற்பழக்கங்களைப் பழகிக் கொள்ளுதல் வேண்டும். ஆசிரியர்கள்பால் மதிப்புவைத்தல் வேண்டும். ஹெட்மாஸ்டரவரவர்கள் தமது குறிப்பில் பெற்றோர்களுடைய கூட்டுறவையும் பாராட்டுதலையும் விரும்புவதாகக் குறிப்பிட்டார்கள். அது மிகவும் அவசியமானது. கலாசாலையில் கற்பிக்கப் பெறுவது வீடுகளில் செய்யப்பெறாது மறக்கப் பெறுகிறது. பிள்ளைகள் முன்னேற்றத்திற்குப் பெற்றோர் கவனமும் அவசியமே. கலாசாலை, வீடு ஆகிய இரண்டு இடங்களிலும் மாணவர் கல்வி வளருதல் வேண்டும். என்னைத் தலைமை ஏற்கும்படி செய்ததற்கு மறு முறையும் நன்றிகூறி, இவ்விழாவிற்குக் காரணராக உள்ள செட்டியாரவர்களை வாழ்த்துகிறேன்" என்று கூறி ஆசனத்தில் அமர்ந்தார். பின்னர் சிதம்பரஞ் செட்டியாரவர்கள் சில நன்றியுரைகளைக் கூறினார்கள். தலைவர் சொற்பொழிவை சயன்ஸ் ஆசிரியர் ராமாநுஜ ஐயங்காரவர்கள் தமிழில் மொழிபெயர்த்துச் சொன்னார்கள். ஹெட்மாஸ்டரவர்களால் வந்தனம் உரைக்கப் பெற்றது. மாணவர்கள் வாழ்த்துப் பாடச் சபை இனிது நிறைவெய்தியது.

---

லாபம் பெற விரும்பினால்,
குமரனில்
விளம்பரஞ் செய்யுங்கள்.









# திருநெறித் தொண்டர் குழாம்.

முதல் ஆண்டு நிறைவு விழா.

(நமது விசேட நிருபரிடமிருந்து.)

நாகர்கோவில், விபவ௵ ஐப்பசிமீ உகஉ

தென்திருவிதாங்கூர் திருநெறித்தொண்டர் குழாத்தின் முதலாண்டு நிறைவு விழா, ஐப்பசித்திங்கள் பத்தொன்பதாம் நாள் ஞாயிற்றுக்கிழமை பிற்பகல் நாகர் கோவிலையடுத்த வடிவீசுவரம் மகமைச் சத்திரத்தின் முன் பக்கம் அலங்காரத்துடன் அமைக்கப் பெற்றிருந்த பரந்த பந்தலில், சென்னை அட்வகேட் திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் தலைமையில் நடைபெற்றது. சுமார் ஆயிரம் ஜனங்கள் குழுமியிருந்தனர். தேவாரம் முதலியன பண்ணுடன் ஓதப் பெற்று கூட்டம் ஆரம்பித்தது. கழகத்தின் அறிக்கை படிக்கப்பெற்றதும், இளந் தொண்டர்கள் சிலர், 'பக்தி, திருநீற்று மகிமை, திருநெறி' முதலிய பொருள்கள் பற்றி சிறு சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள்.

## தலைவர் முன்னுரை.

அப்பால் 'தமிழர் சமயம்' என்பதுபற்றி தலைவர் மிக விரிவாகப் பல மேற்கோள்களுடன் பேசினார். அவர் பேசியதில் சில குறிப்புக்கள் வருமாறு:—

இவ்வுலகில் உயிர் வாழ்வதற்கு உடல் அவசியம் வேண்டும். அது போலவே, நிலையான இன்பத்தைப் பெறுதற்கும் சமயநெறி அவசியமாகும். உடலில் நோய் பற்றினால், யாரும் உடலை வெறுத்து தற்கொலை செய்து கொள்ள மாட்டார்கள். அது போன்றே, சமயத்தில் சிற்சில குற்றங்கள் காணப்படினும், சமயநெறியைக் கைவிடுதலாகாது. அறநெறியே போதுமானதென்றும், சமயநெறி அவசியமில்லையென்றுஞ் சிலர் கூறுகின்றார்கள். அத்தகையார் கூற்றின் உட்பொருள், கடவுள் வழிபாடு வேண்டாமென்று சொல்வதே ஆகும். இனி பண்டைத்தமிழர் என்ன சமயத்தைக் கைக்கொண்டிருந்தார்களெனப் பார்ப்போம்.

தற்போது கைக்கெட்டிய பண்டை நூல் தொல்காப்பியம் ஒன்றே. அதில் தெளிவாகக் கடவுளைப்பற்றிக் கூறப்படவில்லை. அது இலக்கண நூலாயிருந்ததலே இதற்குக் காரணம். எனினும், கடவுளைப் பற்றிய குறிப்புக்கள் இடையிடையே விரவிக் காணப்படுகின்றன. இந்நூலில், முதற்கண் கூறப்படும் எழுத்தியலில், எழுத்துக்கள், உயிரெழுத்து, மெய்யெழுத்து என பாகுபடுத்திக் கூறப்படுகின்றன. எனவே, இருவகை எழுத்துக்களுக்குமுள்ள சம்பந்தத்தை, உயிருக்கும் உடலுக்குமுள்ள சம்பந்தத்தால் உபமானப்படுத்திக் கூறப்பட்டிருப்பதால், அக்காலத் தமிழர், உயிருக்கு முடலுக்குமுள்ள சம்பந்தத்தை நன்கறிந் திருந்தார்களென்பது நன்கு புலனாகின்றது. மேலும், 'முதல் முப்பத்தாறே' என அந்நூலில் குறிக்கப்பெற்றிருக்கிறது. முதல் என்பது தத்துவமாகும். ஆங்கிலத்தில் 'எலிமென்ற்' (Element) எனக் கூறப்படும். இவ்வுலகில் தோன்றி மறையும் சகல பொருள்களுக்கும் ஆதியாகவுள்ள தத்துவங்கள் முப்பத்தாறென்பது பண்டைத் தமிழர் கொள்கை. இம்முப்பத்தாறுக்கும் முதல்வனாயுள்ளவனே கடவுள். ஆங்கில ரசாயன சாஸ்திரத்தின்படி எழுபது தத்துவங்கள் உண்டெனக் கூறப்படுகின்றது. எனினும், தற்கால விஞ்ஞான ஆராய்ச்சியின் பயனாய் இவ் வெழுபதைத்தும் ஒரு தனிப் பொருளின் வெவ்வேறு மாறுபாடுகளே எனக் கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது. எனவே, சகல சடப் பொருள்களுக்கும் முதலாயுள்ள பொருள் அறிவுள்ள ஒரு தனிப் பொருளே என்பது யாவரும் ஒப்புக்கொள்ளும் உண்மையாகும்.

இம் மூலத்தைத் தெரிந்தவனே பெரியவன் எனபது பண்டைத் தமிழர் தேற்றம்.
"சுவையொளியூ றோசை நாற்றமென் றைந்தின், வகை தெரிவான் கட்டே யுலகு"

என்பது குறள். இம் முப்பத்தாறு தத்துவங்களிலும் நிலம், நீர், தீ, ஆவி, ஆகாயம் ஆகிய ஐந்தையுமே நாம் அறிவோம். பிறவற்றை பண்டைத் தமிழர்கள் எவ்விதம் கண்டுபிடித்தார்களோ அறியோம்.

தத்துவ சாஸ்திரம் வடமொழியிலேயே இருக்கின்றதென்றும், தமிழி லில்லையென்றும், அறியாமையாற் சிலர் எண்ணுகின்றனர். ஆராய்ச்சியாளர் இக் கூற்றின் உண்மையைத் தெளிவுபடுத்தியிருக்கின்றனர். வடமொழியிலேயே இந் நூலிருந்தபோதிலும், இதி லமைந்திருக்கும் கருத்துக்கள் தமிழரைச் சேர்ந்தவையென ஜில்பர்ட் ஸ்லேடர் (Gilbert Slater) என்பார் 'இந்தியக் கலையில் திராவிடப் பகுதி' என்ற நூலில் கூறியிருக்கிறார்.

எல்லாவற்றிற்கும் ஆதியாய பொருள் ஒன்றுண்டெனக் கூறினாலும், ஐம்புலன்களாலும் அது அறியமுடியாததாயிருக்கிறது. உடம்பிலடித்தால்; 'என்னை அடித்தான்' என்ற மயக்க நிலையில் உயிர் இருக்கும்போது உயிருக்குயிராய கடவுளை எங்ஙனம் அறியமுடியும்? இதனால் கடவுள் இல்லை எனக் கூறமுடியுமா? முடியாது. ஜடதத்துவத்தில் நம் முன்னோர்கள் கண்டுபிடித்த உயரிய நிலைமையை மயங்காது முயற்சித்துப் பார்க்கின், அறியலாம்.

அறிவற்ற பொருள் ஒருபோதும் தானாக இயங்காது. சூரியன், சந்திரன், பூமி முதலிய வெல்லாம அறிவற்ற பொருள்களாகும். இயக்குவிப்பான் ஒருவனின்றி இவை எங்ஙனம் இயங்கமுடியும்? இதுபற்றியன்றோ 'அவனன்றி ஓரணுவும் அசையாது' என்றார் தாயுமானாரும். ஆகையால் யாவற்றையும் ஒரு விதிப்படி இயக்குவிக்க ஒரு தனிப் பொருள் இருந்துதான் தீரவேண்டும். பலபொருள்க ளிருக்கலாகாதோ எனின்? அன்று. யாவும் ஒரே முறைப்படி இயங்குவதாலும், பலரிருந்தால அவர்களுக்குள் சச்சரவேற்பட்டு அல்லது முரணேற்பட்டு பலவிதமான முறையில் இயங்குமாதலாலும், ஒரே ஒரு தனிப் பொருள்தான் தனி முதலாக இருக்கவேண்டுமென்பது முடிவாகின்றது. இதுபற்றியே 'ஆதி பகவன் முதற்றே யுலகு' என்றார் வள்ளுவரும்.

குறட்பாயிரம் வள்ளுவராலியற்றப் பட்டதல்ல வென்றும், ஆகலால் கடவுள் ஒருவர் உண்டெனக் கூறும் முதற் குறள் கூறும் கொள்கையை அவரது எனக் கொள்ளக் கூடாதென்றும் சிலர் கூறுகின்றனர். அங்ஙனமிருப்பினும், பிற அதிகாரங்களில் கூறப்படும் கடவுள் கொள்கையை என் செய்வது? திருவள்ளுவர் இந்து சமயத்தை, சைவசமயத்தைச் சார்ந்தவரென ஒப்புக்கொண்டால், அவர் கண்டிக்கும் சாதிப்பாகுபாடு, பிறப்பினால் உயர்வு தாழ்வு முதலியன, இச்சமயங்கட்குப் புறம்பானவை யென்றும் கொள்ள வேண்டும். எனவே, அவரை சைனமதத்தவரென நீக்கிவிட்டால், சாதிகளைக் கட்டி அழலாமென்ற நோக்குடன் சிலர் ஆதாரமின்றி பாயிரம் வள்ளுவர் செய்ததல்லவெனக் கூறுகின்றனர். எனினும், நான் அவர்களைப் பழிக்கவில்லை. எதுவும் அளவு மீறிப் போகலாகாதென்பதே என் கருத்து.

உலகப்பற்றை ஒழிக்கவேண்டுமானால், கடவுளைத்தான் பற்றவேண்டும். உயிராகிய கொடிக்கு கொழுக்கொம்பு கடவுள். 'பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு' என்பது குறள். எனவே, எல்லாம் ஆவதற்குக் காரணர் கடவுள் என வள்ளுவர் 'ஆதிபகவன்' என்ற தொடரிற் குறிக்கிறார். இயற்கைப் பெருஞ் சக்தியைக் கொண்டவன கடவுள்.

சிவன் சடைமுடி தரித்தவன் என்றும், வளர் பிறை சூடியவன் என்றும் கூறப்படுகின்றன. இவையெல்லாம் முன்னோர் கையாடிய அடையாளப் பேச்சாகும். இவற்றிலிருந்தே வடிவ வழிபாடு ஏற்பட்டது. வடிவ வழிபாடு அவசியமின்றெனச் சிலர் கூறுகின்றனர். ஓவியம், சிற்பம், இசை முதலிய கலைகள் எங்கு சிறந்து விளங்குகின்றனவோ அங்கு வடிவ வழிபாடுமுண்டு. இவற்றிற் குகந்தவிடம் கோவிலே. கவின் கலைகளாகிய ஐந்தும் அங்குதான் அழகுற விளங்குகின்றன. உலகில் அழகில்லாவிட்டால் ஒன்றுமில்லை.

ஆணவம், மாயை, காமியம் ஆகிய மும்மலங்களையும் அகற்றுவது அறிவுடைமை. இவையே இருவினையையுஞ் சேர்ப்பன. 'இருள் சேர் இருவினை' யென்றார் வள்ளுவரும். இம்மூன்றையும் அடக்குபவனே கடவுளை அடைய முடியும். அவ்வித நிலையை அடைந்தவனுக்கு உலகிலுள்ள பொருள்களெல்லாம் ஒரே படித்தாய் தோன்றும். "எவர் பெரியர், எவர் சிறியர், எவர் பகைவர் எவர் இனைஞர்" என்றபடி யாவரும் வேற்றுமையின்றி அன்பு வடிவங்களாகவே தோன்றுவர்.

கடவுள் தலையில் சந்திரனைச் சூடியிருக்கின்றாரென்றால், களங்கமற்ற அறிவுக்கிருப்பிடமாக விருக்கின்றாரென்பது பொருள். தூவெண்மதி தூய அறிவைக் குறிக்கின்றது. அறிவுக்கு உறைவிடம் தலையாதலால், வெண்மதியைத் தலையில் சூடியிருப்பதாகக் கொள்ளப் படுகின்றது. எனவே இத்தகைய அடையாள மொழிகளைக் கண்டு, கதையெனக் கூறலாகாது. எவ்விஷயத்தைக் கேட்டாலும், கேட்டல், சிந்தித்தல், தெளிதல் என்ற மும் முறையாகவும் அதை ஆராய வேண்டும். கேட்ட மாத்திரத்திலே அல்லது சிந்தித்த மாத்திரத்திலே ஒருபொருளை விலக்கி விடக்கூடாது. இம் மூன்றுக்கும் அப்பாலே நிட்டை கூடுதல் ஏற்படும். அதாவது உள்ளதை உள்ளவாறு உணர்தல். நூல்களை ஆராயும் போது இந்நான்கையும் கைக் கொள்ள வேண்டும்.

தேவார திருவாசகங்களில் உயரிய கருத்துக்களடங்கி யிருக்கின்றன. அவற்றை ஆராய்ந்து தெளிதல் வேண்டும். அறிவுக்குப் பொருத்த மில்லாதவற்றை விட்டு விடலாம். பொன், வெள்ளி, செம்பு முதலிய உலோகங்கள் பூமியிலிருந்து வெட்டியெடுக்கப்படும் போது, களிம்பு பிடித்தனவாய்த் தான் அகப்படுகின்றன. அவற்றை மாசுநீக்கி சுத்தி செய்த பின்னரே அவற்றின் உண்மை நிலைபுலப்படும். அதுபோல் எவ்விஷயத்தையும் ஆராய்ந்து தெளிதலே அறிவுடைமை யாகும்.

## பிற சொற்பொழிவுகள்.

பின்னர், திருநெல்வேலி சபாபதி பிள்ளை அவர்கள், 'கம்பரும் திருவள்ளுவரும்' என்பதுபற்றியும், விருதை சிவஞான யோகிகள் 'சைவசமயம்' என்பதுபற்றியும் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். அப்பால், தொண்டர் குழாம் அமைச்சர் திரு. கெ. ஆறுமுகன் அவர்கள் குழாத்தின் நோக்கங்களைப் பற்றி விரிவாகக் கூறினார்கள். குழாத்தின் நடவடிக்கைகளில் ஏதேனும் குறைபாடுகளிருந்தால், அவற்றைச் சீர்திருத்த தாம் தயாராக யிருப்பதாகவும், சீர்திருத்தஞ் செய்யவே அது ஏற்பட்டதென்றும், குறிப்பிட்டார். பின், திருநெல்வேலி திரு. இ. மு. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் 'தமிழர் வானநூல்' என்பதுபற்றி ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். சோதிடம் என்பது ஒளிநூலென்றும், தமிழர் ஒளிநூலில் சிறந்து விளங்கின ரென்றும், பன்னீராயிரம் ஆண்டுகட்கு முன்னரே தமிழர் இக்கலையில் சிறந்த ஆராய்ச்சி பெற்ற நூல்களியற்றின ரென்றும், அந்நூற்களிற் பல அழிந்தொழிந்தன வென்றும் கூறிவிட்டு, மாதங்களுக்கு எவ்விதம் பெயரிடப்பட்டன வென்றும், இதில் ஆரியருக்கும் தமிழருக்கும் ஏற்பட்ட வித்தியாசத்தைப் பற்றியும், தமிழர் முறையின் உயர்வைப் பற்றியும், ஒவ்வொரு மாதத்திற்கும் ஏற்பட்ட விசேடங்களை அந்தந்த மாதங்களில் தான் நடத்தவேண்டு மென்றும், நட்சத்திரப் பாகுபாடுகள் ஏற்பட்ட விதத்தைப்பற்றியும் அவர் தெளிவாய்க் கூறினர்.

## திரு. சுந்தரமூர்த்தி ஓதுவார்.

அப்பால் திரு. சுந்தர மூர்த்தி ஓதுவார் அவர்கள், 'உயிர்ப்பலி' என்னும் பொருள் பற்றி நிகழ்த்திய சொற்பெருக்கின் சாரம் வருமாறு:—

'உயிர்ப்பலி யென்னும் விஷயம் யாவர்க்கும் முக்கிய மானது. எச்சமய வாதிகளும் அல்லது பிற தொண்டர்களும் இதை மறக்க முடியாது. கொலை செய்யும் போது பிராணிகள் துடி துடிப்பதை நாம் பார்த்தால், நம்மனமே நடுங்குகிறது. எனவே, உயிர்ப்பலி யிடுதலைப்பற்றிய கொள்கை ஒரு சமயத்தை மட்டுஞ் சார்ந்ததன்று. எனினும் இதில் இரண்டு பாகுபாடுக ளிருக்கின்றன. உணவுக்காகப் பலியிடுதல் ஒன்று; தெய்வத்திற்காகப் பலியிடுதல் மற்றொன்று. முன்னையதைப்பற்றி ஈண்டு பேச வேண்டியதில்லை. பின்னையதைப் பற்றியே நான் சில கூற விரும்புகிறேன். இந்நாட்டில் அரசாங்கத்தார் கோவில்களில் உயிர்ப்பலியிடக்கூடா தெனத் தடுத்திருப்பது போற்றற்குரியதாகும். எனினும், ஆங்காங்கே மறைவாக நடக்கும் பலிகளும் உண்டு.

சகல ஜீவராசிகளின் உடல்களையும் இறைவன் கோயில்களாகக் கொண்டிருக்கிறான். எனவே, உயிருள்ள ஓர் கோயிலை இடித்துத் தள்ளியதற்காக, பதினாயிரம் கோயில்களைக் கட்டினாலும் பாவந் தீராது. கொள்ளைநோய் பரவியிருக்கும் காலத்தில்தான், சில தெய்வங்கள் உயிர்ப்பலி கேட்கின்றன. ஆச்சமயந் தான் அவை தலைவிரித்தாடும். உயிர்ப்பலி கேட்கும் தெய்வம் உலகத்திலேயே உண்மையாக இல்லை. அப்படி யிருந்தால் அதை வெட்டிவிட்டு அவ்விடத்தை நாசமாக்கப் படுத்திவிடலாம். தான் பெற்ற குழந்தையைக் கொன்று சமைத்துண்ண ஒரு தந்தை விரும்புவானா? ஒருபோதும் மாட்டான். இதுபற்றியன்றோ, கோயில் முன்பாகப் பலியிடும் போது, சந்நிதானத்தில் திரையிட்டு மறைக்கிறார்கள். தெய்வத்திற்குச் சம்மதமில்லை யென 'இதினின்றும் அறியவில்லையா? மேலும், வெட்டப்போகும் ஆட்டுக்கு, தலையில் நீர் தெளித்து, அது மயிர் சிலிர்த்தால் தான், தெய்வம் ஏற்குமென்றும் இல்லா விட்டால், ஏற்கா தென்றும் கூறுகிறார்கள். முன்னிற்கும் மனிதர் தலையில் நீர் தெளித்தாலும், அவர்களும் சிலிர்ப்பார்கள். ஆதலால் அவர்களையும் வெட்டி விடலாமா? இவ்வளவு மோசமான நிலையில் நமது நாடு இருக்கிறது. இவ்விஷயம் ஒன்றைச் சீர்திருத்தஞ் செய்தால் போதாதா? 'அவி சொரிந்தாயிரம் வேட்டலின், ஒன்றன் உயிர் செகுத்துண்ணாமை நன்று' என்றார் வள்ளுவரும். ஆதலின், இக்கொடுமையை ஒழிக்க யாவரும் முன்னிற்க வேண்டுமெனக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

## தலைவர் முடிவுரை.

பின்னர் தலைவர் முடிவுரையாக, அன்று நிகழ்த்தப்பட்ட சொற்பொழிவுகளின் சாரத்தை குறிப்பிட்டுவிட்டு, நாகர்கோவில் சுயமரியாதைத் தொண்டர்கள் கேட்ட கேள்விகளுக்குப் பதிலளித்தார். அவரளித்த பதிலின் சுருக்கம் வருமாறு:—

புராணங்களிற் சில கதைகள்தான். அவற்றில் சில பொருத்தமில்லாமலுமிருக்கலாம். எனவே, அவற்றில் பொய்யும் மெய்யும் கலந்தே யிருக்கின்றன. கடவுளை வழிபட்டவன் பயன் பெற்றான் என்பதே அவை கொள்ளும் முக்கிய கருத்து. நம்பிக்கை உடையவர்கள் அவற்றைக் கொள்ளலாம். பொருத்த மில்லாதன வற்றை விட்டு விடலாம். அறிவுக்கு எட்டாத விஷயத்தை கேட்டுத் தெளிதல் நலம். எனவே, பௌராணிகத்தை அறவே ஒழிக்க முடியாது. 'எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும், அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு', 'எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு.' உலகில் கழிக்கக் கூடிய பொருள் ஒன்றுமில்லை.

'அத்தமில்புளுகு அடங்கிய கந்தபுராணம்' எனக் கூறப்பட்டிருக்கிறது. 'எந்தப் பொருளும் கந்தபுராணத்திலுண்டு' என்பதில் 'பொருள்' 'புளுகு' என மருவிற்று. 'அறவடித்தகஞ்சி காடிப்பானையில் விழும்' என்பது இப்போது உலகவழக்கில் 'அறப்படித்த மூஞ்சூறு காடிப்பானையில்விழும்' என வழங்குகிறது. அந்நூலில் நீதிக் கொள்கைகள் பல காணப்படுகின்றன. பண்டைக்காலத் தமிழ்மக்களின் போர்த்திறம் அதில் சிறப்பாக விளங்குகிறது. இதுபோல் பெரிய புராணத்திலும், சில பகுதிகள் சேர்க்கப்பட்டிருக்கலாம். உலகவழக்கின்படி, நாயன்மார்களின் செய்கைகளைக் கண்டிக்கமுடியாது. ஆதலால் அவர்களைப் பழிக்க இடமில்லை.

சம்பந்தர் சமணர்களைக் கழுவேற்றவில்லை, சம்பந்தர் திருவருள் பெற்றவர் என்பதை உண்மையாக நம்பினால், அவரது செய்கைகளை எவ்விதம் ஆராயவேண்டுமோ அவ்விதமே ஆராயவேண்டும். ஒன்றைமட்டும் நம்பி மற்றொன்றை நம்பாது விடுதல் ஆராய்ச்சி ஆகாது. உள்ளவாறு எவ்விதம் நடந்ததென்பதை நாம் பார்க்கவில்லை. நமக்குக் கிடைத்துள்ள சரித்திரத்தைக்கொண்டே அவற்றைப் படிக்கிறோம்; 'வாதில் தோற்றால், யாங்களே கழுவேறுவோம்' என சமணர் கூறினர். மேலும்,

பகுதி ௫.

அத்தியாயம் ௩௦.

ரௌலட் கமிட்டி அறிக்கைக்கு எதிரிடையான பிரசாரம் பலமாகச் செய்யப்பட்டுவரும்பொழுது, அரசாங்கத்தார் ரௌலட் கமிட்டியின் சிபார்சுகளை நடவடிக்கைக்குக் கொண்டுவர ஏற்பாடு செய்ய ஆரம்பித்தனர். அத்துடன் ரௌலட் திட்டமும் வெளியிடப்பட்டது. என் வாழ்க்கையில் நான் இந்திய சட்டசபையின் நடவடிக்கைகளை ஒருதடவை பார்த்திருக்கிறேன். அதாவது ரௌலட் திட்டத்தைப் பற்றிய வாதம்சட்ட சபையில் நடந்துகொண்டிருக்கும் பொழுதுதான். அதில் கனம் சாஸ்திரியார் தீவிரமான சொற்பொழிவு நிகழ்த்தினார். அதில் அன்னார் அரசாங்கத்தாருக்கு ரௌலட் கமிட்டி திட்டத்தைப்பற்றி ஒரு எச்சரிக்கை விடுத்தார். இராஜப் பிரதிநிதி பாவைபோல் சாஸ்திரியாரின் பிரசங்கத்துக்குச் செவிசாய்த்துக் கேட்டுக்கொண்டிருந்தார். சாஸ்திரியார் ஆவேசத்துடன் சரமாரியாகச் சொற்பொழிவு நிகழ்த்திக்கொண்டிருக்கும்நேரம் இராஜப் பிரதிநிதியின் கண்கள் சாஸ்திரியாரின் உருவத்தில் கூர்த்துப் பதிந்தன. சாஸ்திரியாரின் பிரசங்கம் கேட்பவர்களுடைய மனதை உருகச்செய்யும் தன்மை யுடையதாயிருந்தமையால் அப் பிரசங்கம் கேட்கும் இராஜப் பிரதிநிதியின் உள்ளமும் சிறிது அசைந்திருக்கக்கூடும் என்ற அச்சம் எனக்கிருந்தது.

ஆனால், ஒரு மனிதன் உண்மையாகத் துயிலுற்றிருப்பானுயின், அவனை உணர்த்துவது எளிது. அவன் உறங்குவதுபோல் பாவனை செய்துகொண்டிருந்தால் எவ்வளவு முயற்சித்தபோதிலும் அவனை உணர்த்துவது முடியாத காரியமாகும். இரண்டாவதாகக் கூறியது அரசாங்கத்தின் தற்போதைய நிலைமையாகவிருந்தது. சட்டப்படியுள்ள மாமூல் முறை அனுஷ்டித்து முடித்தால் போதுமென்ற ஒரே கவலை மட்டுமே இவ்விஷயத்தில் அரசாங்கத்தாருக்கு

---

அக்காலத்தில் அவர்கள் கலகக்காரர்களாகவே யிருந்தனர். அப்பர் சுவாமிகளை அவர்கள் என்னசெய்தார்கள்? சைவர்கள் இப்படி செய்யலாமாவென்ருல், அறநெறி கைப்பிடித் தொழுகும் சமணர்கள் இப்படி செய்யலாமாவென ஏன் கேட்கக்கூடாது? சமயக் கொள்கைக்காக அவர்கள் ஒரு போதும் கழுவேற்றப்படவில்லை. இதற்காகத் திருவிழா நடக்கிறதென்ருல், சரித்திர விசேடங்களை ஞாபகப் படுத்துவதற்காக வருடந்தோறும் கொண்டாடினல், அதற்காக யார் அவர்களைத் தண்டிப்பது? இவற்றிற்கெல்லாம் மதம் உத்திரவாதியாகுமா?

வேதம்—அவரவர் சமய நூலை வேதமெனவே எம்மதத்தினரும் கூறியிருக்கிருர்கள். உயிர்ப்பலியிட்டு வேள்விநடத்தல் வடமொழியாளர் வழக்கம். நெய் நவதானியங்களைக்கொண்டு வேள்விநடத்தல் தமிழர் முறை. ஆகையால் உயிர்ப்பலியிட்டு வேள்வி நடத்துவதை தமிழர் கொள்கையெனக்கூறல் ஆராய்ச்சியில்லாதார் கூற்றேயாகும்.

ஒதுக்கப்பட்ட தாழ்ந்த வகுப்பினர்க்கும் ஆலயப்பிரவேச உரிமை அளிப்பது நியாயமே. சமயமும், கல்வியும் யாவர்க்கும் எம்மதத்தினர்க்கும் பொதுவானவையென்பது யாவரும் ஒப்புக்கொள்ளும் உரிமையாகும். இதுவே எனது கொள்கை. ஆகையால், தாழ்ந்த வகுப்பாரையும் புனிதமாக்கி, தூய்மைப்படுத்தி, கோயிலுக்குள் ஏற்றுக்கொள்வது கடமையாகும். இதனுல் விரோதமில்லை. 'சிவனெனும் ஓசையல்ல கொடிய சண்டாளன் மொழியில் அவனுடன் உறை; அவனுடன் உணக' என சிவஞான சுவாமிகள் கூறியிருக்கின்ருர்.

சாதிக்கட்டுப்பாடுகள் குறைந்துவருகின்றன. நாளடைவில் இவை தேய்ந்தேபோகும். அவற்றை ஒழிக்கவேண்டியது அவசியமே.

'சமயமின்றி சன்மார்க்கமில்லை.' சன்மார்க்கத்திற் கடிப்படையானது சமயமே. எனவே, கடவுள் நம்பிக்கை யாவற்றிற்கும் ஆதியானதாகும். 'ஒன்றே குலமும், ஒருவனே தேவனும், நன்றேசெய்மின்' என்ருர் திருமூலரும்.

நன்றி கூறுதலுடன் சமார் ௧0-மணிக்கு சபை இனிதுநிறைவெய்தியது.

---

# அடிகளின் உண்மைவாழ்வு.

இருந்தது. அரசாங்கத்தார் ஏற்கனவே இவ் விஷயத்தைப்பற்றி முடிவுசெய்து விட்டனர். ஆகையால் சாஸ்திரியாருடைய எச்சரிக்கை அரசாங்கத்தின் முடிவை மாறுபடச் செய்யமுடியவில்லை.

நிலைமை இவ்வாறிருக்க, என்னுடைய வேலையோ வீணுகத்தான் போகும் என்று நான் நினைத்தேன். நான் இராஜப் பிரதிநிதியுடன் இவ் விஷயத்தில் ஆர்வத்துடன் ஓர் விவாதம் நடத்தினேன். அவர்களுக்கு இரகசியமாகவும், பகிரங்கமாகவும் பல கடிதங்கள் விடுத்தேன். இவ் விஷயத்தில் அரசாங்கத்தார் செய்துள்ள முடிவு என்னை சத்தியாக்கிரகப் போர் தொடுக்கும்படி தூண்டுகிறது என்று அவற்றில் குறிப்பிட்டிருந்தேன். ஆனால், இவைகளால் ஒரு பயனும் விளையவில்லை.

ரௌலட் திட்டம் சட்டமாக அமைக்கப்பட்டதென்ற அறிக்கை அதுவரை கெஜட்டில் வெளியிடப்படாமலிருந்தது. எனது உடல் நிலை மிகக் குலைந்திருந்தபோதிலும் அதனை நான் பொருட்படுத்தாது எனக்குச் சென்னையிலிருந்து கிடைக்கப்பெற்ற ஓர் அழைப்புக்கு இணங்கத் தீர்மானித்தேன். பொதுக் கூட்டங்களுக்குப் போதுமான பெருத்த குரலிற் பேசுவதற்கு எனக்கு முடியாமலிருந்தது. இப்பொழுது போல் அப்பொழுதும் கூட்டங்களில், நின்றுகொண்டு சொற்பொழிவு நிகழ்த்துவதென்பது எனக்கு முடியாமலிருந்தது. நின்றுகொண்டு சிறிதுநேரம் சொற்பொழிவு செய்வதால் உடல் முழுதும் நடுக்கமும், அதைத் தொடர்ந்துகொண்டு இருமலும் உண்டாகும்.

தென்னுட்டில் இருக்கும்பொழுது என்னுடைய சொந்த நாட்டில் அனுபவிக்கும் சுகங்களை முற்றிலும் அனுபவித்துவந்தேன். தென்னுப்பிரிக்காவில் நான் செய்த வேலையினுல் எனக்கு தமிழ், தெலுங்கு தேசத்திய மக்கள்பால் தனிப்பட்ட உரிமை இருப்பதாக உணர்ந்தேன். அதுவுமன்றி, தென்னுட்டு ஜனங்கள் என்னுடைய நம்பிக்கையில் எனக்கு ஒருபோதும் இடையூறு செய்யவில்லை. குறிப்பிட்ட அழைப்பில் காலஞ்சென்ற ஸ்ரீயுத. கஸ்தூரிரங்கய்யங்காரின் கையெழுத்திடப்பட்டிருந்தது. ஆனல், இவ் வழைப்புக்குக் காரணமாக இருந்தவர் இராஜகோபாலாசாரியார் என்ற உண்மை நான் சென்னைக்குப் பிரயாணம் செய்யும் வழியில் எனக்குத் தெரியவந்தது. அவருடன் நான் முதற்றடவை பழக்கமாக நேரிட்ட சமயம் இதுவாகத்தான் இருந்தது என்று கூறலாம். இத் தருணத்தை முற்கொண்டே நாங்கள் ஒருவரையொருவர் நேரில் அறிமுகம் செய்துகொண்டோம்.

பொதுஜன ஊழியத்தில் அதிகமாக ஈடுபடவேண்டுமென்ற நோக்கங்கொண்டு, காலஞ்சென்ற ஸ்ரீயுத கஸ்தூரி ரங்கய்யங்கார் போன்ற சில நண்பர்களுடைய வேண்டுகோளுக் கிணங்கி, இராஜகோபாலாசாரியார் சில நாட்களுக்கு முன்னதாக சேலத்தைவிட்டு சென்னைக்கு வந்து வக்கீல்வேலை பார்த்துவந்தார். நாங்கள் சென்னையிலிருந்தபொழுது அவருடன் தங்கினேம். இதன் உண்மை எனக்குச் சென்னையில் இரண்டு நாட்கள் கழிந்தபின்னர்தான் தெரியவந்தது. இச் சந்தேகத்துக்குக் காரணம், நாங்கள் தங்கியிருந்த பங்களா ஸ்ரீயுத கஸ்தூரி ரெங்கய்யங்காரின் சொந்த பங்களாவாக இருந்தபடியால் அவருடைய விருந்தினர் என்று நினைத்திருந்தோம். மகாதேவ தேசாய் இதன் உண்மையை எனக்கு எடுத்துரைத்தார். எங்களுடன் நெருங்கப் பழக அச்சமுற்றிருந்ததால் மறைவிலிருந்து கொண்டுவந்த இராஜகோபாலாசாரியுடன் மகாதேவ தேசாய்விரைவில் நட்புக்கொண்டார். ஆனல், மகாதேவ தேசாய் எனக்கு இதன் உண்மையை விளக்கி ஒருநாள் என்னிடம் 'இந்த மனிதனை தாங்கள் பயிற்சி செய்ய வேண்டும்' என்று உரைத்தார்.

அவ்வண்ணமே நான் செய்தேன். அரசாங்கத்துடன் தொடுக்கவிருக்கும் போர் விஷயமாக நாங்கள் இருவரும் ஆலோசனை செய்தோம். ஆனல் பொதுக் கூட்டம் கூடுவதைத் தவிர வேறு திட்டங்கள் என்னுடைய அறிவுக்கு அச்சமயம் புலப்படாமலிருந்தது. ரௌலட்திட்டத்தை அமுலுக்குக் கொண்டுவந்தால், அதற்காக எவ்வாறு சட்டமறுப்பு ஆரம்பிப்பது என்பதும் எனக்குத் தெரியாமலிருந்தது. அரசாங்கத்தார் ஒரு சந்தர்ப்பத்தை உண்டாக்கினல் அதைக் காரணமாகக் கொண்டு சட்ட மறுப்பு தொடங்கலாம். அவர்கள் சந்தர்ப்பம் கொடுக்காதபொழுது, நாம்பொதுவாக எல்லாச் சட்டங்களையும் மறுப்பதா? அப்படி மறுப்பதாயிருந்தால் நம்முடைய மறுப்புக்கு வரம்பு எங்கே? இவைகளையும், இவைகள் போன்ற ஏனைய பல வினக்களையும் பற்றி நாங்கள் யோசனை செய்தோம்.

இவ்விஷயத்தை தீர ஆலோசனை செய்து முடிவுக்கு வரும் பொருட்டு ஸ்ரீயுத கஸ்தூரிரங்கய்யங்கார், ஒரு சிறு மகாநாட்டுக்கு ஏற்பாடு செய்து தலைவர்களை அழைத்தார். அம் மகாநாட்டு வேலையின் முன்னணியில் நின்று வேலை செய்தவர்களுள் ஸ்ரீயுத விஜயராகவாசாரியார் ஒருவர். நுட்பமான விஷயங்களுக்கும் முடிவு கூறும்படி அமைக்கப்பட்ட சத்தியாகிரக விரிவுரை ஒன்று தயாரிக்கும்படி என்னிடம் அவர் கேட்டுக் கொண்டார். இந்த வேலை என்னுல் செய்யத்தக்க தல்லவென்ற உண்மையை நான் அவரிடம் ஒப்புக் கொண்டேன்.

இந்த விஷயமாக எல்லோரும் தீவிரமான யோசனை செய்துகொண்டிருக்கும் மத்தியில், ரௌலட்திட்டம் சட்டமாக அமைக்கப்பட்டு விட்டதென்ற செய்தி எட்டியது. அன்றிரவு இவ்விஷயத்தைப் பற்றி ஆழ்ந்து சிந்தனை செய்து கொண்டிருக்கையில் உறக்கம் என்னை பிடித்துக் கொண்டது. விடியற் காலத்தில் கிடைக்கக் கூடிய சிறிது நேரத்தில், நான் வழக்கத்தை விட சிறிது முன்னமே துயிலுணர்ந்தேன். உறக்கத்துக்கும் உணர்வுக்கும் நடுவிலிருந்து கொண்டிருக்கும் பொழுது கனவில்கண்டது போல், எனக்குத் திடீரென ஒரு யோசனை தோன்றிற்று. காலையில் அதன் வரலாற்றை முற்றிலும் இராஜகோபாலாசாரியாரிடம் எடுத்துரைத்தேன். அது வருமாறு:—

"ஹார்த்தால் அனுஷ்டிக்கும்படி பொதுஜனங்களுக்கு நாம் ஒரு கோரிக்கை விடுக்கவேண்டுமென்ற யோசனை எனக்கு நேற்று இரவுகனவில் தோன்றியது. சத்தியாக்கிரகம் என்பது தன்னைத் தான் பரிசுத்தம் செய்துகொள்ளும் ஓர் முறையாகும். நாம் தொடுக்க எண்ணங் கொண்டுள்ள போர் அறப்போர். ஆகையால் அப்போர் தொடுப்பதற்கு முன் ஒவ்வொரு மனிதனும் ஆன்மாவை பரிசுத்தம் செய்துகொள்ள வேண்டுவது அவசியம். ஆகையால் ஒரு குறிப்பிட்ட தினத்தில் இந்தியாவிலுள்ள மக்கள் யாவரும் அவரவர்களுடைய வேலையை நிறுத்தம் செய்துவிட்டு, பட்டினி விரதம் அனுஷ்டிப்பதோடு கடவுளை வழிபடச் செய்ய வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்படல் வேண்டும். மகம்மதிய சகோதரருக்கு ஒரு தினத்துக் கதிகம் பட்டினி விரதம் அனுஷ்டிக்க முடியாமலிருக்கக் கூடும். ஆகையால் விரதத்தின் காலம் ௨௪ மணிநேரமாக விருந்தால் போதும். நம்முடைய கோரிக்கைக்கு எல்லா மாகாணங்களும் இணங்கக் கூடுமா என்ற அச்சம் எனக்கிருக்கிறது. ஆனல் பம்பாய், சென்னை, பீகார், சிந்து ஆகிய மாகாணங்களைப்பற்றி நான் உறுதி கூறமுடியும். இம்மாகாணங்களில் ஹார்த்தால் நேர்மையான முறையில் அனுஷ்டிக்கப்படுமானல் அதுவே நாம் செய்த வேலைக்குத் தகுந்த பலனளிப்பதாக விருக்கும்."

இராஜகோபாலாசாரியார் என்னுடைய யோசனைக்கு முற்றிலும் உடன் பட்டார். பிறகு மற்ற நண்பர்களுக்கும் இதைத் தெரிவித்தவுடன் அவர்களும் அதை முற்றிலும் ஆதரித்தார்கள். நான் சுருக்கமான ஓர் வேண்டுகோள் தயார் செய்தேன். ஹார்த்தால் அனுஷ்டிப்பதற்கு ௧௯௧௯ ஆம் மார்ச்சு௴ ௩0உ குறிப்பிடப்பட்டது. பின்னர் அது ஏப்ரல்௴ ௬உ க்கு மாற்றப் பெற்றது. இக்காரணத்தால் ஜனங்களுக்கு ஹார்த்தால் அனுஷ்டிக்கப் போதிய அளவு முன் அறிவிப்பு இல்லாமல் போயிற்று. வேலை விரைவில் தொடங்க வேண்டியிருந்தபடியால் இதற்கதிகமான காலம் கொடுக்க இயலாமற் போயிற்று.

இம்முடிவுக்கு வந்தது எவ்வாறென்று யாருக்குத் தெரியும்? இமயமலை முதல் கன்னிமுனை வரை இந்தியா முழுதும், நகரங்களும் கிராமங்களும் ஒரே விதத்தில் குறிப்பிட்ட தினத்தில் ஹார்த்தால் அனுஷ்டித்தன. அது ஓர் மிகுந்த அற்புதமான காட்சியாக விருந்தது.

---





குமரன் மாதப்பதிப்பு.

வருஷ சந்தா

ரூபா ஒன்றரைதான்.

---

அன்பர்களே!

அரிய கட்டுரைகளைப் படிக்க விரும்பினால் — — —

— — — குமரனை வரவழையுங்கள்.



பார்ப்பனியத்தை ஒழியுங்கள்.

## விளம்பரம்.

தேவகோட்டை சப்கோர்ட்டு.
O. S. No. 165 of 28.

பலவாங்குடியிலிருக்கும் க. ராம. நா. ராம. ராமன் செட்டியார் குமாரர் க. ராம. நா. ராம. லெட்சுமணன் செட்டியார் ... ... வாதி.

ஷை யூரிலிருக்கும் வெ. சு. சுப்பிரமணியன் செட்டியார் குமாரர் வெ. சு. முத்துவள்ளியப்ப செட்டியார்-1, மேற்படி யூரிலிருக்கும் (ஏப. சு.) சுப்பிரமணியன் செட்டியார் குமாரர் (ஏப. சு.) பழனியப்ப செட்டியார்-2, மேற்படியூரிலிருக்கும் மு மு. வீரப்பசெட்டியார் குமாரர் மு. மு. வீரப்பசெட்டியார்-3 ... ... பிரதிவாதிகள்.

இந்த நிம்பரில் பலவாங்குடி (செங்கனி) கிராமத்திலுள்ள ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேஸ்வராள் கோவில் காரியத்தனம் இப்போது நடக்கிற (செ. மு.) கரைக்கு அடுத்து (க. ராம.) கரை ஒரு வருஷமும் அப்பால் (வெ. வெ.) கரை ஒரு வருஷமும், அப்பால் (ஏப. சப.) கரை ஒரு வருஷமும், அப்பால் (செ. மு.) கரை ஒருவஷமும், அப்பால் (க. ராம.) கரை ஒரு வருஷமும் அம்மாதிரியாகவே நெடுகிலும் ஷை கோவில் காரியத் தனம் பார்த்துவர (க. ராம.) கரைகாரர்கள் பாத்திய அனுபவஸ்தர்கள் என்று தீர்மானம் பெறவும், இதர பரிகாரங்கள் பெறவும் ஷை வழக்கிட்டிருக்கிறது. அதில் (க. ராம.) கரைகாரர்களுக்கு வாதியும் (வெ. வெ.) கரைகாரர்களுக்கு 1-வது பிரதிவாதியும், (ஏப. கப.) கரைகாரர்களுக்கு 2-வது பிரதிவாதியும், (செ. மு.) கரைகாரர்களுக்கு 3-வது பிரதிவாதியும் பிரதிநிதியாக கோறி மேற்படி வியாஜ்ஜியம் செய்து மேற்படி நிம்பருக்கு (22-11-28) தேதி வாயிதா ஏற்பட்டிருக்கிறது. மேற்கண்ட (க. ராம.) கரைகாரர்களில் இஷ்டமானவர்கள் இந்த நிம்பரில் வாதிகளாகவும் மேற்கண்ட (வெ. வெ.) கரை (ஏப. கப.) கரை (செ. மு.) கரைகாரர்களில் இஷ்டமானவர்கள் பிரதிவாதிகளாகவும் சேர்ந்து கொள்ளலாமென்ற விபரம் இதன் மூலம் தெரிவிததிருக்கிறது.

எஸ். ஜெகன்னாதய்யங்கார்
(170) வாதி வக்கில
தேவகோட்டை.

---

## நோட்டீஸ்.

சிவகெங்கை டி. மு. கோர்ட்டு.
1928-ஷு O. S. நெ. 217

முத்தூர் வெ. வீரப்பன் சேர்வை —வாதி.

ஷை யூர் முத்துவாகிய உடையார் மகன் சினனய்யாக் கோன் வகையறு —பிரதி வாதி.

ஷை நிம்பரில் வாதிக்கு 1-வது பிரதி வாதி ஷைசின்னய்யாக் கோன் ரூ 500-க்கு 27-11-1919-ல் எழுதிக் கொடுத்திருக்கிற ரிஜிஸ்தர் சீட்டுகடன் தஸ்தவேஜுப்படி வரவேண்டியதுகை வட்டி யுள்பட ரூ 2127-7-6-க்கும் பின் வட்டி பின் சிலவுக்கு பிருது செய்திருப்பதில் கடைசியாய் ஷை 1-வது பிரதிவாதி சமனை கோர்ட்டு வாசலிலும் ஷை யான் வீட்டு வாசலிலும் ஒட்டி மேல் நடத்த 1928-ஷு I. A. நெ. 1141-ல் மனுக் கொடுத்து உத்திரவாகி வாய்தா 24-11-28-க்கு வாய்தா ஏற்பட்டிருக்கிறது. ஷை வாய்தாவில் ஆஜராகத் தவறினால் 1-வது பிறதிவாதியை எக்ஸ்பார்ட்டி செய்யப் படுமென்று இதன் மூலம் அறிவித்திருக்கிறது.

8—11—1928.

எஸ். சின்னசாமி அய்யங்கார்
(171) வக்கீல்.
— — சிவகெங்கை.

# மின்சாரரசம்

## சகல வியாதிகட்கும் தேவாமிர்தம் போன்றது.

பத்தியமில்லை! அநுபான மில்லை!!

உள்ளுக்கும் மேலுக்கும் துளிகள் கணக்காக உபயோகித்து நிமிஷக் கணக்கில் குணமடையலாம்.

**விசேஷம்.** மனிதர்கள் தலை முதல் கால் வரையில் வரும் சகல வியாதிகட்கும் மின் சார ரசத்தை உபயோகித்து ஆச்சரியகரமாக குணமடையலாம். எவ்வித ஆபத்திக்கும் உதவும்.

REGISTERED TRADE MARK — MINSARA RASAM

**டாக்டர்.** ஒரு பாட்டில் மின் சார ரசம் கையிலிருந்துவிட்டால் ஒரு டாக்டர் நம் வீட்டில் இருப்பதுபோல தைரியமாக இருக்கலாம். ஒரே முறை பரீக்ஷியுங்கள். கைகண்ட மருந்து.

டாக்டர்களால் கைவிடப்பட்ட அநேகர் மின்சார ரசத்தினல் உயிர் பெற்றிருக்கிறார்கள்.

ஆயிரக் கணக்கான நற்சாக்ஷிப் பத்திரங்கள் பெற்றது.

இன்றைக்கே எழுதுங்கள். கேட்லாக் இனும்.

புட்டி 1-க்கு ரூ 2. தபால் சார்ஜ் வேறு.

விலாசம்:— மின்சார ரசம் கம்பெனி (லிமிடெட்) சேலம்.

செட்டிமார் நாட்டில் முக்கியமான வியாபாரிகள். } மேஸர்ஸ் A. V. அண்டு சன்ஸ், காரைக்குடி.

(137)

---

ஸ்ரீராமஜெயம்.

தண்டலம் ஜோதிஷாலயம். திருத்தணி, சித்தூர் ஜில்லா.

## அறிக்கை.

இப்பிரதேசத்தில் ஜோதிஷ சாஸ்திர விஷயமாக கீர்த்திபெற்று ஜோதிஷ்பரம் பரையில் 15-வது தலைமுறையிலுதித்த அடியில்கண்ட தண்டலம் ஜோஸியரால், ஜாதகம் ஆரூடம் முதலானதுகள் நவக்கிரஹ பலாபலங்களையும் சாரங்களையும் ஹோராசாஸ்திரத்தை யொட்டியும் பூரப விஷயத் வர்த்தமானங்களை கண்டும் சாஸ்திர திருஷ்டாந்திரங்களுடன் உறுதியாய் சொல்லப்படும்.

| | கட்டணம் |
|---|---|
| ஆரூடம் 1 முதல் 27 கேள்விகளுக்கு | 1—0—0 |
| ஒருவருஷத்திற்கு மாசவாரி பலன் | 1—0—0 |
| ஐந்துவருஷத்திற்கு மாசவாரி பலன் | 3—0—0 |
| ஆயுர்தாயம் வரையில் அந்திரபலன்களுக்கு | 25—0—0 |
| சாஸ்த்ரோக்தமாயும் பரம்பரை அனுபவத்தில் வரும் வரப்பிரஸாதயந்திரம் 1க்கு | 1—12—0 |

யந்திரத்தை சிரத்தை பக்தியுடன் உபயோகித்து வருகிறவர்களுக்கு கோரிய நல்ல பலன்கள் கைக்கூடி வரும். மைத்த விஷயங்களுக்கு மேல்கண்ட ஜோதிஷாலயத்திற்கு எழுதி தெரிந்துகொள்ளலாம்.

T. P. ஸ்ரீநிவாஸாசாரியார்.
தண்டலம் ஜோஸியர், திருத்தணி.
சித்தூர் ஜில்லா,

(147)

---

வெளிவந்து விட்டது! வெளிவந்து விட்டது!

## துரதிர்ஷ்ட இந்தியா.

என்னும் அருமையான நூல் வெளிவந்துவிட்டது. கன்னிமேயோ என்னும் அமேரிக்கமாதின் "இந்தியமாதா" வுக்குசரியான மறுப்பெழுதத் தகுந்த உத்தமர் இந்த உலகத்தில் யார்?

பாஞ்சாலச்சிங்கம் லாலா லஜபதிராய்தான்

பெரியபுத்தகம். காலிக்கோபயிண்டு, 38 அத்தியாயங்களில் தக்க ஆதாரத்துடன் பதிலளித்திருக்கிறார்.

கன்னிமேயோ ஊர் வம்பர் பேச்சையும் கட்டுக்கதைகளையும் ஆதாரமாகக்கொண்டே நூல் எழுதினர். நமது சிங்கமோ தான்கூறும் ஒவ்வொருவார்த்தைக்கும் சர்க்கார் தஸ்தாவேஜிகளிலிருந்தும் மேனாட்டார் நூல் களிலிருந்தும் மேற்கோள் காட்டியிருக்கிறார். இந்தியர்களுக்கு உறுதுணையான ஒரு அழிவிலா கிரந்தமாகும். கிறிஸ்தவர்களுக்கு பைபிளும் முஸ்லீம்களுக்கு குர்ஆனும் ஹிந்துக்களுக்கு பகவத்கீதையும் எவ்வளவு முக்கியமோ அவ்வளவுக்கு இந்தியமாதாவிடம் உண்மை பக்தியுடைய பாரதபுத்திரர்களுக்கு இந்த துரதிஷ்ட இந்தியாவும் முக்கியமானதாகும். உடனே ஒருபுஸ்தகத்துக்கு ஆர்டர் செய்யுங்கள். இதன் விலை ரூ 2—8—0.

மானேஜர் முத்தையாபுக்டிப்போ.
தபால் பெட்டி 99, சென்னை.

(149)

---

## மகாத்மா காந்தி ஜோஸியர்.

தரும நியாயமான 5 கேள்விகளுக்கு ரூ 1. மேல் ஒவ்வொரு கேள்விக்கும் அணு 4. கடிதம் எழுதும்போதுள்ள நேரத்தைக் குறிப்பிடல் வேண்டும். எல்லாக் காரியங்களிலும் அனுகூலமான பலனைக் கொடுக்கும் "ஜய விஜயம்" தாயத்து 1-க்கு ரூ. 1. ஸ்பெஷல் தாயத்து ரூ. 50. [illegible] நேரில் எழுதித் தெரிந்துகொள்ளவும்.

(160) ஆஞ்சனேய சுவாமி ஜோதிடாலயம்,
தந்தி விலாசம் :— ஹநுமான். திருத்தணிகை, சித்தூர் ஜில்லா.

---

சிலமுக்கிய புத்தகங்கள்.

பழனிஸ்தலபுராணம் ரூ. 2. 8; திருவாதவூரடிகள் புராணம் ரூ. 1. பட்டினத்துப் பிள்ளையார் பாடல், பத்ரகிரியார் புலம்பல் விருத்துரை படத்துடன்; ரூ 1 8 0; திருக்குறள் உரையுடன் ரூ. 3 8 0 ஷெமட்டம் ரூ. 2. 8; பிரபஞ்ச உற்பத்தி ரூ. 4 0 0 வேதாந்தசாஸ்பம் ரூ. 2 0 0 மனுதர்மசாஸ்திரம் ரூ. 2 0 0 திருமுறை தேவாரத்திரட்டு ரூ. 2 8 0 மஸ்தான் சாயபு பாடல் ரூ 3 0 0 கைவல்லியம் விசேஷ விருத்தியுரை ரூ. 2 8 0

R. K. ராஜன் அண்ட் கம்பெனி,
(159) வெப்பெரிபோஸ்ட், சூளை சென்னை.

---

## பார்ப்பனியத்தை ஒழியுங்கள்.

---

## Sanitary Goods

உயர்ந்த ரகமுள்ள சுகாதாரத் தளவாடங்கள்.

கிடைக்குமிடம்:—
ராவல் அண்டு கம்பெனி,
8. சவுண்டர்ஸ் வீதி,
சென்னை.

---

## திருப்பூர் கதர் ஜவுளிகள்.

தீபாவளி வரையில் விலை சலீசாகவே விற்கப்படும்.

எல்லாவிதமான கதர் துணிகளும் கிடைக்கும், பனியன் துணிகளும், ஏராளமாக தயார் செய்யப்படுகிறது.
விலை 32 இஞ்ச், பூராசைஸ் கார்டிகன் பனியன்;
டஜன் 1-க்கு 3—8—0,
மற்ற விலை விபரம் ஜாபிதாவுக்கு எழுதவும்.

மா. வெ. கருப்பண்ண செட்டியார்,
திருப்பூர், (தென் இந்தியா.

(160)

---

யுனைடெட் இந்தியா லைப்

## அஷியூரன்ஸ் கம்பெனி,

(லிமிடெட்)
தலைமை ஆபீஸ்—மதராஸ.
ஸ்தாபனம் 1906ம் ௵
சென்னை மாகாணத்திலுள்ள லைப் அஷ்யூரன்ஸ் கம்பெனி [illegible]
அக்கிராசனர்
எஸ். எம். வி. டி. முத்தையா செட்டியார் K. T., M. L. A.
சமீபத்தில் 5 வருஷத்திற்கென்று விதியோகிக்கப்பட்ட
போனஸ் பூரென்ஸ் தொகை ரூ 1000-க்கு ரூ 75.
பரிமியம் மிதமானது. நிபந்தனைகள்—[illegible]
கிளேம் பணம் கொடுப்பதை ஒத்திவைப்பது—இதில் நீர் [illegible] பாத்தியதைகளை உடனே கவனிப்பது—நம் முக்கிய [illegible]

"இந்தியாவிலே மிகவும் உறுதியானதும், பணத்தை [illegible] மேலான நிர்வாகத் திறமையுடையதும் மிகச் சிக்கனத்துடன் [illegible] மான கம்பெனிகளில் இதுவுமொன்று. லைப் அஷ்யூரன்ஸ் கம்பெனிகளில் முதன்மையானவற்றில் இது ஒன்றாகும்" என்று "[illegible]" வருஷ அனுபந்தப் பிரசுரத்தில் காணப்படுகிறது.
விவரங்களுக்கு அடியிற் கண்டவருக்கு எழுதவும்.

எம். ராமமூர்த்தி, சீப் ஏஜெண்டு, ராமநாதபுரம் அண்டு புதுக்கோட்டை, தஞ்சாவூர், காரைக்குடி. } மானேஜர்:— ஸ்டார் அண் கம்பெனி, மக்லீன் ஸ்ட்ரீட், மதராஸ்.

(136)

---

கீர்த்திபெற்ற நோவு நிவாரணி.



## லிட்டில்ஸ் ஓரியென்டல் பாம்

தலைபாவு தடவை [illegible]
(139) எல்லா ஷாப்புகளிலும் கிடைக்கும்.

Page numbering incorrect.

(பத்திராதிபர்) சொ. முருகப்ப செட்டியாரால் காரைக்குடி 'குமரன்' அச்சுக்கூடத்தில் அச்சியற்றிப் பிரசுரிக்கப்பெற்றது.

